ஓம்
திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றுந்
திங்கள்தோறும் வெளிவருவது.

சிலம்பு ய } மெய்கண்டான் யாண்டு-எாகூ வைகாசித் திங்கள் 1932ஆ மேமீ—ஜூன்மீ { பரல் ரு

திருச்சிற்றம்பலம்

## திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம்

### திருவாரூர்

முன்னம் அவனுடைய நாமங் கேட்டாள்
மூர்த்தி யவனிருக்கும் வண்ணங் கேட்டாள்
பின்னை யவனுடைய வாரூர் கேட்டாள்
பெயர்த்தும் அவனுக்கே பிச்சி யானாள்
அன்னையையும் அத்தனையு மன்றே நீத்தாள்
அகன்றாள் அகலிடத்தா ராசா ரத்தைத்
தன்னை மறந்தாள் தன்னாமங் கெட்டாள்
தலைப்பட்டாள் நங்கை தலைவன் றாளே.

பதவுரை

நங்கை=பெண்ணிற் சிறந்தவள் ஆகிய தலைவி

முன்னம்=முதலாவது

மூர்த்தி அவனுடைய நாமம் கேட்டாள்=(கண் கவரும் வனப்பு வாய்ந்த) தன் தலைவனுடைய உருவத்தைப் பார்த்து அவனுடைய புகழை அறிந்தாள்

அவன் இருக்கும் வண்ணம் கேட்டாள்=(பின்னர்) அவனிடத்திலுள்ள குணங்கள் இன்னஎன அறிந்தாள்

பின்னை அவனுடைய ஆரூர் கேட்டாள்=அதன்பின் அவன்வாழும் ஊர் திருவாரூர் என அறிந்தாள்

பெயர்த்தும்=(முன் களவொழுக்க காலத்தில் அவனிடத்தில் மயல் கொண்டது போல) கற்பொழுக்கம் பூண்ட பின்னும்

அவனுக்கே பிச்சி ஆனாள்=அவனிடத்திலே மயக்கம் கொண்டு அயரா அன்பை உடையவளானாள்

அன்றே=(தலைவனிடத்தில் மயக்கங்கொண்டு அயரா அன்பு உடையவளான) அப்பொழுதே

அன்னையையும் அத்தனையும் நீத்தாள்=(முன்னே தனக்குத் துணையாகச் சார்பு வைத்திருந்த) தாய் தந்தையர்களையும் (பிற உறவினர்களையும்) துறந்தனள்

அகலிடத்தார் ஆசாரத்தை அகன்றாள்=பரப்பான உலகத்திலுள்ளவர்களுடைய இற்செறிதல் நாணுடைமை முதலிய கட்டுப்பாட்டு ஒழுக்கங்களை எல்லாம் நீங்கினாள்

தன்னை மறந்தாள்=(முன் தன் பெற்றோர்களிடமிருந்தபொழுது) தான் இன்னாள் எனக் கொண்டிருந்த நினைப்பும் இல்லாதவளானாள்

தன்நாமம் கெட்டாள்=அந் நினைப்பினால் உண்டாயிருந்த செயல் புகழ் முதலியவற்றையும் மறந்தனள்

தலைவன்தாள் தலைப்பட்டாள்=தன்னுடைய தலைவனையே சார்பாகக் கொண்டு அவனுடைய அன்பாகிய காவலின்கீழ் வந்து பொருந்தினள்.

விளக்க உரை

இந்த அருமையான தேவாரப்பாட்டு இருவினையொப்பும் மலபரிபாகமும் சத்திநிபாதமும் அடைந்த ஒருயிர் சிவபெருமானது உண்மை இயலை (சொரூப இலக்கணத்தை) மெய்யுணர்வினால் உணர்ந்து அறிந்து உயிர்ப்பற்றுப் பொருட்பற்றுக்களை முற்றிலும் விட்டு தன்முனைப்புச் சிறிதுமின்றி, தன் அறிவு செயல் முற்றிலும் கெட்டு, சிவபெருமானுடைய திருவருளில் இரண்டறக் கலந்து பேரின்பம் அடைந்தது என்ற உண்மையைத் தலைவி தலைவன் என்னும் உருவகத்தில் வைத்துக் கூறுகின்றது. மேலே கூறிய பதவுரை உருவக உவமைக்குப் பொருந்தக் கூறப்பட்டது. விளக்க உரையில் அவ்வுரை உருவகப்

பொருளுக்கும் (உவமேயப் பொருளுக்கும்) பொருந்தும்படியாயும் கூறப்படும்.

2. இவ்வாறு உருவகம் செய்து கூறுதல் அகப்பொருள் என்று கூறப்படும். அகப்பொருள் என்பது ஒருவன் உள்ளத்தினுள்ளே நிகழ்ந்து அவனால் உணர்ந்து அறியப்படும் இன்பமாகிய பொருள். அகம் ஆகு பெயராய் அகத்தில் நிகழும் இன்பம் எனப் பொருள் பட்டது. இன்பம் இருவகை. ஒன்று உலகப்பொருளில் பற்று வைத்து உலக நுகர்வை நுகரும் சிற்றின்பம் (உலக போகம்); மற்றொன்று சிவப்பொருளில் பற்று வைத்து அச்சிவத்தை நுகரும் பேரின்பம் (சிவபோகம்.) சிற்றின்பமாயினும் பேரின்பமாயினும் இன்பமானது ஒருவரால் தன்னுள்ளே உணர்ந்து அறியப்படும் தன்மையுடையது; பிறர் அதனைச் சொல்லக்கேட்டு அறியப்படுந்தன்மை உடையதன்று. வெல்லத்தை முன் சுவைத்து அறிந்த ஒருவனே "வெல்லம் இனிப்பாயிருக்கிறது" என்று பிறனொருவன் தன்னுணர்வினால் அறிந்ததைச் சொல்லக்கேட்டு அறிதல் முடியும். அதுபோல பேரின்பத்தை நுகர்ந்து உணர்ந்து அறிந்த பெரியோர்கள் அதனை உணர்ந்துஅறியாத உலக மக்களுக்கு அவர்கள் பேரின்பம் இன்னது என ஒருவாறு துவக்கத்தில் அறியும்படி அவர்களுக்குப் பழக்கமாயுள்ள நெறிப்பட்ட சிற்றின்ப நிலையில் உயிரைத் தலைவியாகவும் சிவபெருமானைத் தலைவனாகவும் உருவகம் செய்து கூறுதலே அகப்பொருட்துறையில் வைத்துக் கூறுதலாகும். மாணிக்கவாசக சுவாமிகள் திருக்கோவையார் என்ற நூலை அகப்பொருட்டுறையில் வைத்துப் பாடியருளினர். சமயாசாரிகள் நால்வரும் தேவார திருவாசகங்களில் பல பாட்டுக்கள் அகப்பொருள் குறித்துப் பாடி யிருக்கிறார்கள். திருநாவுக்கரசு சுவாமிகள் பாடிய பல அகப்பொருட் பாட்டுக்களில் இப்பாட்டு ஒன்று. இவ்வாறு அகப்பொருளிற் பாடும் நூல்வழக்கு தமிழருக்கே உரியது. அகப்பொருளைக் கூறும் பொருளிலக்கணமும் தமிழ்மொழியிலன்றி ஆரியம் முதலிய வேறு எம்மொழியிலும் கிடையாது.

3. சிவபெருமான் தலைவனாகவும் உயிர் தலைவியாகவும் வைத்து உருவகம் செய்ததற்குக் காரணங்கள் உளவோவெனிற் கூறுதும். (1) சிற்றின்பத் துறையில் பாயுஞ்சத்தியுடைய தலைவன் (positive element) தாங்குஞ் சத்தியுடைய தலைவிக்கு (negative element) இன்பங் கொடுத்தல் போல் பேரின்பத் துறையில் வரம்பில் இன்பமுடைய சிவபெருமான், ஒன்றைச் சார்தலும் சார்ந்தவண்ணமாதலும் இயற்கையாகவுடைய உயிருக்குப் பேரின்பம் கொடுக்கின்றவனா யிருக்கிறான்.

(2) தலைவி தலைவனுடன் அன்பினால் ஈருடல் ஓருயிரெனச் சார்ந்து கலத்தலினால் சிற்றின்பமடைதல் போல உயிர் அயரா அன்பினால் சிவபெருமானைச் சார்ந்து அவனுடன் இரண்டற(அத்துவிதமாக)க் கலத்தலினாலே பேரின்பம் அடைகிறது.

(3) சைவசித்தாந்த உண்மைக்கூறாகச் சத்தி சிவத்தில் ஒடுங்குதல் போலச் சத்தியின் கூறாகிய பெண் சிவத்தின் கூறாகிய ஆணில் ஒடுங்குதல் வேண்டும்; ஒடுக்கநிலையில் சத்தியும் சிவமுஞ் சேர்ந்து ஒரு பொருளாதல் போலப் பெண்ணும் ஆணும் சேர்ந்து ஒருபொருளாகின்றன. சாரப்பட்ட பொருள் சிவத்தின் கூறாகிய ஆண்; சாரும்பொருள் சத்தியின் கூறாகிய பெண் ஆகும்.

(4) உலகவழக்கில் பெரும் பான்மையும் பெண் ஒருத்தியே "அறிவுமிக்க நன்னுணமு நிறைமையு மாசையு மிங்குள்ள—உறவும் பெற்ற நற்றாயொடு தந்தையுமுடன் பிறந்தவரோடும்-பிரியவிட்டு" ஆண் ஒருவனை அடைந்து "உனை அடைந்தனன் என்றுகொள்" என்று கூறி அவனுடைய இல்லத்தில் இல்லாளாக அமைந்து இன்புறுகின்றாள்.

4. இனிப், பாட்டிலுள்ள சொற்களிலும் சொற்றொடர்களிலும் பொதியப்பட்டிருக்கும் பொருள்களை இயன்றவாறு விளக்குவாம்.

நங்கை=பெண்மகளிற் சிறந்தவளைக் குறிக்கிறது, நம்பி ஆண்மகனிற் சிறந்தவனைக் குறித்தல் போல. பேரின்பத்தை அடையும் உயிரே உயிர்களில் மேம்பட்டுச் சிறந்த உயிர் ஆதலின் அது நங்கைக்கு உவமித்துக் கூறப்பட்டது.

மூர்த்தி=வடமொழிச்சொல். உருவமுடையவன் உருவ உலகில் உருவத்தில் விளங்கும் உயிருக்கே பெயரும் புகழும் உண்டு.

அவனுடைய=அவன் என்ற சுட்டுச்சொல் பின்வருகிற தலைவனைக் குறிக்கிறது.

நாமம் கேட்டாள்—நாமம்=பெயர், புகழும் ஆகும்.

உருவக உவமை, அதாவது சிற்றின்ப நிலையில் நாமம் கேட்டல் என்பது, தலைவனுடைய பெயரையும் அப்பெயராற் குறிக்கப்படுகிற புகழையும் அறிதலாகும். புகழ் என்பது இங்கே தலைவனுடைய உருவ நலன், குலநலன், கல்விநலன் முதலியவற்றைக் குறிக்கும். தலைவனுடைய நலன் தன் நலனுக்கு ஒத்திருப்பதாகத் தலைவி அறிதல்—கேட்டல் இங்கே அறிதலைக் குறிக்கிறது.

உருவகப் பொருள், அதாவது பேரின்பநிலையில் நாமம் கேட்டல் என்பது, ஒரு பக்குவமடைந்த உயிர் தனது தூய உள்ளத்தில் சிவத்தின்

அருளொளி விளங்கப்பெற்று அதனை உணர்ந்து அறிதல். நாமமென்பது இங்கே ஒளியைக் குறிக்கிறது. ஒருவனுக்கு உலகில் புகழ் உண்டாதலும் ஒளி (அறிவு) விளக்கத்தினாலுண்டாகும் ஒப்புரவுச் செயல்களினாலேயாம். அதுபற்றி ஒளி என்ற சொல்லுக்குப் புகழ் என்ற பொருளும் உண்டு. திருக்குறள் 870-வது குறளில் ஒளி என்ற சொல்லுக்குப் பரிமேலழகர் புகழ் என்று பொருள் கூறியிருத்தல் காண்க. இந்த ஒளியைத் திருநாவுக்கரசு சுவாமிகள் "கள்ளத்தைக் கழிய மனமொன்றி நின்—றுள்ளத்தி லொளியைக் கண்டதுள்ளமே" என்று உள்ளத்திருக்குறுந் தொகை 3-வது பாட்டிற் கூறியருளினர். இந்த ஒளியை உணர்ந்து அறிதல் தெளிவு (illumination) ஆகும்.

மூர்த்தி அவனுடைய நாமம் கேட்டல் என்பது சிவம் பிறப்பு இறப்பில்லாமல் நித்தியமாய் விளங்கும் தன்மை (உண்மை அல்லது சத்து)யை உயிர் தனக்கு விளங்கின தெளிவறிவால் அறிதல் ஆகும். இந்த அறிவால் பக்குவம் அடைந்த உயிருக்குத்தான் பிறப்பு இறப்பின்றி நித்தியமாய் (immortal) விளங்குதற்குச் சத்துப் பொருளாகிய சிவத்தைச் சார்ந்திருத்தல் வேண்டும் என்பது விளங்குகின்றது. கேட்டல் is responding to or feeling God, Consciousness within similar to the ear responding to sound vibrations from outside. இந்தப் பொருளைப் பின் இரண்டு இடங்களில் வருகிற "கேட்டாள்" என்ற சொல்லுக்கும் பொருத்திக் கொள்க.

அவனிருக்கும் வண்ணம் கேட்டாள்=வண்ணம் என்பது நிறம்; குணமும் ஆகும். ஒருவனுடைய பருஉடலைச் சுற்றி விளங்குகிற ஒளி வட்டத்தில் (aura) அவனுடைய பல குணங்களைக் குறிக்கிற பல நிறங்கள் தெளிவு பார்வையர்களுக்கு (clairvoyants) த் தெரிகின்றன. இவ்வாறு நிறம் குணத்தைக் குறித்தலால் நிறத்தைக் குறிக்கிற வண்ணம் என்ற சொல் குணத்தையும் குறிக்கப் பண்டைத் தமிழரால் வழங்கப்பட்டு வந்தது. சிற்றின்ப நிலையில் வண்ணம் என்ற சொல் தலைவனுடைய நற்குணங்களைக் குறிக்கும்; தலைவன் தனக்கு ஒத்த நற்குணங்களை உடையவன் என்று தலைவி அறிதல் அவனிருக்கும் வண்ணம் கேட்டல் ஆகும். நல் அறிவால் அமையும் நற்குணங்களைத் தலைவன் உடையவனா யிருந்தால் அன்றித் தலைவிக்கு இன்பம் அளித்தல் சாலாது.

பேரின்ப நிலையில் வண்ணம் சிவபெருமானுடைய என் குணங்களையும் குறிக்கும். எண்குணங்களும் அவனுடைய பேறிவில் அடங்கும். அவனிருக்கும் வண்ணம் கேட்டல் என்பது உயிர் சிவமானது அகர உயிர் போல அறிவாகி நிறைந்திருக்கும் சித்துத் தன்மையைத்

தன்னுடைய சிட்டை அறிவால் அறிதலாகும். இந்த அறிவால் உயிருக்குத் தான் இதுவரை கருவி அறிவால் அறிந்த சிற்றறிவு நீங்கிப் பேரறிவு அடைதற்குச் சித்துப் பொருளாகிய சிவத்தைச் சார்ந்திருத்தல் வேண்டும் என்பது விளங்குகின்றது.

பின்னை அவனுடைய ஆரூர் கேட்டாள்=இந்தத் தேவாரம் திருவாரூர்த் தலத்துக்கு பாடப்படுதலால் ஆரூர் எனப்பட்டது.

சிற்றின்ப நிலையில் ஆரூர் தலைவனிருக்கிற ஊரைக் குறிக்கிறது. தலைவி முதலாவது தலைவனுடைய புகழ்நலனை அறிந்ததும் பின் அவனுடைய குணங்களை அறிந்ததும் அவனைச் சேர்ந்து இன்பம் நுகர்தற்காகவே. அவ்வாறு அவள் அவனிடம் போய் இன்பம் அடைதற்கு அவனிருக்கிற ஊரை அறிந்தாள். இனம்பற்றி, அறிந்தபொழுது தலைவி தலைவனுடன் சுரம் வழியாய்ச் சென்று அவன் ஊர் சேர்ந்து அவனை மணந்து இன்புற்று வாழ்தலும் கொள்க.

பேரின்ப நிலையில் திருவாரூரில் சிவபெருமான் எழுந்தருளியிருக்கிற மூலத்தானம் புற்றிடம்—புற்றிடம் பாம்பு இருக்கிற இடம். சுத்தமாயையில் விளங்கும் சிவசத்தி மூலாதாரத்தில் பாம்பு போல் வளைந்திருத்தலால் குண்டலி சத்தி என்று கூறப்படும்; குண்டலி=பாம்பு. இக் காரணத்தால் பாம்பு சுத்தமாயையைக் குறிக்கிறது. திருவாரூர் சுத்தமாயாப் பிருதிவித்தலம். பிருதிவிக்கு சுவை ஒளி ஊறு ஓசை என்னும் நான்கு பொதுக் குணங்களும் நாற்றம் (மணம்) என்னும் ஒரு சிறப்புக் குணமும் உள. நாற்றம் அல்லது மணம். இன்பத்தைக் குறிக்கிறது. ஒரு பூவின் மொக்குள் மலர்ந்து பூத்த (பூப்பு அடைந்த) பின்பு மணம் வீசி இன்பம் தருகின்றது. இவ்வுவமை பற்றிப் பண்டைத் தமிழர்கள் மணம் என்ற சொல்லையும் மன்றல் என்ற சொல்லையும் ஒரு வயதுவந்த இளைஞனும், ஒரு பூப்பு அடைந்த பெண்ணும் சேர்ந்து இன்புற்று வாழும் இல்வாழ்க்கைச் சடங்குக்குப் பெயர்களாக வழங்கி வந்தனர். திருமூலர் திருமந்திரத்தில் "பூவினிற் கந்தம் பொருந்தியவாறு போல்—சீவனுக்குள்ளே சிவமணம் பூத்தது" என்று கூறியருளினர்.

அவனுடைய ஆரூர் கேட்டல் என்பது சிவம் இன்பதனை எய்துவார்க்கேயும் இன்ப உருவினன் (ஆனந்தம்) என்ற உண்மையை உயிர் தனது மெய்யுணர்வால் அறிதலாகும். இந்த அறிவால் உயிருக்குத் தான் பேரின்பம் அடைதற்கு ஆனந்தப்பொருள் (இன்பப் பொருள்) ஆகிய சிவத்தைச் சார்ந்திருத்தல் வேண்டும் என்பது விளங்குகின்றது.

பின்னை—உயிர் மேலே கூறியவாறு சிவனுடைய சத்துத் தன்மையையும் சித்துத் தன்மையையும் உணர்ந்து அறிந்த பிற்பாடு; அதாவது சிவசத்தான தன்மையும் சிவசித்தான தன்மையும் உணர்ந்து அறிந்த பிற்பாடு. உண்மை நிலையில் சத்துத் தன்மை கட்டுக்கும் (பாசத்துக்கும்) உயிருக்கும் சிவத்துக்கும் உரித்து; சித்துத் தன்மை உயிருக்கும் சிவத்துக்கும் உரித்து; கட்டுக்கு உரித்தன்று. தலைவி தலைவனுடைய புகழையும் குணத்தையும் அறிந்து சிற்றின்பமடைதற்கு அவனது ஊர் செல்லுதல் போல உயிர் சிவத்தினுடைய சத்துத் தன்மையையும் சித்துத் தன்மையையும் அறிந்தபின் பேரின்பமடைதற்கு "அயரா அன்பின் அரன்கழல் செல்கின்றது". மேலே கூறியபடி தலைவனுடைய நாமம் கேட்டல் வண்ணம் கேட்டல் ஆரூர் கேட்டல் மூன்றும் முறையே சிவனுடைய சத்து சித்து ஆநந்தம் (உண்மை அறிவு இன்பம்) ஆகிய மூன்று குணங்களையும் அறிதலைக் குறிக்கின்றன. (சச்சிதாநந்தம்). இந்த மூன்று அறிதல்களும் முறையே ஒன்றுக்கொன்று ஏதுவும் பயனுமாயும் பின்னையதில் முன்னையது அடங்குவதாயும் இருக்கின்றன. ஒரு பூவினுடைய உருவம் நிறம் மணம் மூன்றும் சேர்ந்து பூ என்ற பொருள் ஆதல்போல சத்து சித்து ஆநந்தம் மூன்றும் சேர்ந்து சிவப்பொருள் ஆதலினால் இம்மூன்றும் இங்கே கூறப்பட்டன.

உருவுற்பல நிறமொண் மணஞ் சோபை
தரநிற்ப போலுயிர் தற்பரந் தன்னின்
மருவச் சிவமென்ற மாமுப் பதத்தின்
சொரூபத் தன்சத்தியாதி தோன்ற நின்றான்.

என்று இந்த உண்மை திருமந்திரத்திற் கூறப்பட்டிருத்தல் காண்க.

உற்பலம்=குவளைப்பூ. சோபை=ஒளி. சத்தியாதி=சத்துசித்து ஆநந்தம்.

பெயர்த்தும் அவனுக்கே பிச்சியானாள்=பெயர்த்தும் என்பதற்கு சிற்றின்ப நிலையில் பதவுரையில் பொருள் கூறப்பட்டது. பிச்சி-பிச்சு உடையவள். பிச்சு பித்து என்பதன் போலி. பிச்சு-மயல் மயக்கம் பற்று.

பேரின்ப நிலையில் உயிர் முன்னம் பொது இயலை (தடத்த இலக்கணம்) அறிந்த கட்டு(பெத்தம்) நிலையில் சிவத்தினிடத்தில் உலக நுகர்வுகளை அருளுதற்காகப் பற்றுவைத்திருந்தது; இப்பொழுது உயிர் உண்மை இயலை (சொரூப இலக்கணம்) அறிந்த வீட்டு நிலையில் சிவத்தினிடத்துப் பேரின்பம் அருளுதற்காகப் பற்று வைக்கிறது. பிச்சி ஆனாள்—உயிர் சிவத்தினிடத்தில் அயரா அன்பு வைத்து அவன் மயமாயிற்று.

அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்—சிற்றின்ப நிலையில் பொருள் பதவுரையில் கூறப்பட்டது.

பேரின்பநிலையில் உயிர்ப்பற்று முழுவதும் விட்டொழிதல் கூறப்பட்டது. அன்றே என்ற சொல்லால் விளக்கு ஒளிவரவும் அதனுடனே இருள் நீங்குதல் போல அருட்சத்தி உயிரினிடத்தில் பதியவும் அதனுடனேயே உயிர்ப்பற்றும் நீங்கியது என்பது குறிப்பிடப்பட்டது.

அகலிடத்தார் ஆசாரத்தை அகன்றாள்—பேரின்ப நிலையில் உலகப் பற்று முழுவதும் விடுதல்.

அகலிடத்தார் ஆசாரம்—Worldly Conventions.

தன்னை மறந்தாள்—சிற்றின்ப நிலையில் தன்னை மறத்தல் என்பது தலைவி தான் ஒருபொருள் என வேற்றுமையின்றித் தலைவனுடன் அன்பால் ஒற்றுமைப் படுதல். இவ்வாறு தலைவி தலைவனுடன் ஒற்றுமைப் படுதல்தான் அவனைக் கூடி அடையும் சிற்றின்பத்துக்கு இன்றியமையாமையாகின்றது.

பேரின்ப நிலையில் உயிர் தன்முனைப்புக் கெடுதல் 'நான்' கெடுதல்; முற்றிலும் தன்மயம் அழிந்து சிவன் மயமாதல். உயிர் பேரின்பம் அடைதற்கு தன்மயம் அழிதல் இன்றியமையாது வேண்டப்படுவதாகின்றது.

தன்நாமம் கெட்டாள்—சிற்றின்ப நிலையில் நாமம் கெடுதல் என்பது தலைவி தன் தாய் தந்தையர் மனையிலிருந்த பொழுது செய்த சிற்றில் கோலுதல் வண்டலயர்தல் முதலிய செயல்களையும் அவைகளாலே தன் தோழிகளுக்குள் உண்டான புகழையும் நினைப்பின்றி மறத்தல் ஆகும். இதுவும் தலைவி தலைவனைச் சேர்ந்து அடையும் சிற்றின்பத்துக்கு இன்றியமையாமையாகின்றது.

பேரின்பநிலையில் உயிர் தான் முன் உலகப்பற்று (வேட்கை) காரணமாகச் செய்த அறிவு செயல்கள் முற்றும் விட்டொழிதல்; அதாவது உயிர் தன் அறிவு கெட்டுத் தன் செயல் அழிதல். நாமம் என்ற சொல் இங்கே வேட்கை அறிவு செயல்கள் சேர்ந்து உயிர் ஆதலின் அவை உயிரின் நாமம் எனப்பட்டன.

தலைவன்தாள் தலைப்பட்டாள்—சிற்றின்பநிலைப் பொருள் பதவுரையிற் கூறப்பட்டது.

பேரின்ப நிலையில், தலைவன்—ஆண்டவன் ஆகிய சிவன்; தாள் அருள்; தலைப்படுதல்—எய்துதல், சேர்தல். உயிர் தலைவன்தாள் தலைப்படுதல்

(தலையாற் பொருந்தல்) என்பது அடிமையாகிய உயிர் ஆண்டவன் ஆகிய சிவனைத் தாடலைபோலத் தான் என அவன் என வேற்றுமையின்றி அத்துவிதமாய்க் கலந்து பேரின்பம் அடைதல்.

1 தன்னை மறந்தாள் 2 தன் நாமங் கெட்டாள் 3 தலைவன்தாள் தலைப்பட்டாள் மூன்றும் முறையே ஒன்றினுக் கொன்று ஏதுவும் பயனுமாய் அமைந்திருக்கின்றன. உயிர், தன்னை மறத்தலும் தன் நாமங் கெடுதலும் முறையே சிவஞானபோதம் ௰-வது சூத்திரத்திற் கூறப்பட்ட "ஏகனுதலையும்" "இறைபணி நிற்றலையும்" தலைவன் தாள் தலைப்படல் மேற்படி கக-வது சூத்திரத்திற் கூறப்பட்ட "அரன்கழல் செல்லுதலையும்" குறிக்கின்றன.

இப்பாட்டில் முன் கூறப்பட்ட 1 அவன் நாமம் கேட்டல், 2 அவனிருக்கும் வண்ணம் கேட்டல் 3 அவனுடைய ஆரூர்கேட்டல் மூன்றும் முறையே ஒன்றனுக்கொன்று ஏதுவும் பயனுமாய் அமைந்திருத்தலையும் பின் கூறப்பட்ட 1 தன்னை மறந்தாள், 2 தன் நாமம் கெட்டாள், 3 தலைவன்தாள் தலைப்பட்டாள் மூன்றும் முறையே ஒன்றனுக்கொன்று அவ்வாறே ஏதுவும் பயனுமாய் அமைந்திருந்தலையும், முன்கூறப்பட்ட நாமம் வண்ணம் ஆரூர் மூன்றும் ஆண்டவனுகிய சிவபெருமானுக்கு உரியனவாயும் பின் கூறப்பட்ட தன்னை மறத்தல் தன் நாமம் கெடுதல் தலைவன்தாள் தலைப்படுதல் ஆகிய மூன்று பயன்களும் அடிமையாகிய உயிர் அடைதற்கு உரியனவாயும், உயிர் முன் கூறப்பட்ட சத்துச் சித்து ஆநந்தத் தன்மைகளை உடைய சிவபெருமானைச் சேர்ந்து பின் கூறப்பட்ட மூன்று பயன்களையும் இதுகாறும் அடையவொட்டாமல் இடையிலே இடையீடாக நின்று தடுத்துக் கொண்டிருந்த பொல்லாத ஆணவமலத்தாலுண்டாகிய உயிர்ப்பற்று பொருட்பற்றுக்களை இந்த இரண்டு திரயங்களுக்கும் இடையிலே வைக்கப்பட்டிருத்தலையும் சிவநேயச் செல்வர்கள் உற்று நோக்கி உள்ளி உள்ளம் கரைந்து உருகிப் பெருகி உவட்டா இன்பம் தெவிட்டாமல் அடைவார்களாக. ஆ! இப்பாட்டின் அருமைதான் என்னே! என்னே!!

குறிப்பு—திருவருள் என்து தகுதிக் கேற்பத் துணை செய்த அளவில் நான் இந்த உரையை அரிதின்முயன்று எழுதினேன். இதில் பொருத்தமில்லாத கருத்துக்கள் சில இருத்தல் கூடும். இருப்பின் அன்பர்கள் அவைகளை எனக்கு விளக்கி அறிவிக்கும்படி நான் அவர்களைப் பணிவுடன் கேட்டுக்கொள்கிறேன்.

மா. வே. நெல்லையப்ப பிள்ளை.

# தொல்காப்பியனார்

[தாராபுரம். நா. ஆறுமுகம் பிள்ளை எழுதியது]

ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியனாரைத் தமிழறிஞர் எல்லாரும் நன்கறிவர். தொல்காப்பியத்துக் குரைகண்ட ஆசிரியர் நச்சினார்க்கினியர் அந்நூற் சிறப்புப் பாயிரவுரையில் இவரை யமதக்கினியார் மகனார் என்று குறித்துப் போந்தார். என்றுமுள தென்றமிழுக்கு ஒப்புயர்வில்லாத் திப்பிய இலக்கண நூல் இயற்றிய ஆசிரியரை வடவாரியராம் யமதக்கினியார் மகனார் என்றல் ஒரு சிறிதும் பொருந்துவதன்றாகலானும், யமதக்கினியார்க்குத் தொல்காப்பியர் (திரணதூமாக்கினி) என்னும் பேர் வாய்ந்த மகனார் ஒருவர் இருந்தாரென்றற்குச் சான்றொன்றுமின்மையானும் நச்சினார்க்கினியர் கூற்றுக் கொள்ளற்பாலதன்றென்பர் பலர். இவர்தம் கூற்றுக்களை யாராய்ந்து உண்மை காணப்புகலே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

யமதக்கினியார் என்ற வடமொழிப் பெயரைக் கேட்ட அளவானே அவர் வடஆரியரே யாவரெனக் கருதுதல் ஏதமாம். என்னை? பண்டை ஞான்றிருந்த (இஞ்ஞான்றும் பலர் உளர்) ஆரியரும், தம் உள்ளத்து அகழ்ந்தெறிய மாட்டாது வலிதின் வேரூன்றிய வடமொழிப்பற்று மிகவுடையாராய பிறரும் அறிவாற்றல்களிற் சிறந்தாராய் விளங்கிய தனித்தமிழ் மக்களைத் தம்மவர் ஆக்கிக் கொள்ளின் தமக்கும் தங்கள் வடமொழிக்கும் ஏற்றமாம் என நினைந்து அவர்தம் பெயரையெல்லாம் வடமொழியின் மொழிபெயர்த்தும், திரித்தும், வேறுபெயர் தந்தும் வழங்கித் தம் நினைவை முடித்துக் கொண்டனராகலான். திருநாவுக்கரசரை வாகிசர் என்றலும், சேரலரைக் கேரளர் என்றலும், நின்றசீர் நெடுமாறரைச் சௌந்தர பாண்டியன் என்றலும் எடுத்துக்காட்டுக்களாம். இனி, யமதக்கினியார் வடவாரியரல்லரேன் மற்றியாவரோ வெனிற் கூறுதும். பல்லாயிர ஆண்டுகட்கு முன்னர்த் தமிழரிற் பரத மரபினர்க்கு ஆசிரியராய் விளங்கிய விசுவாமித்திரர்தம் உரவினர் தமிழ்க்

குரவராய ஜமதக்கினிகள் என்னுமுண்மை இருக்கு மாமறையாற் புலனாதலை ஆசிரியர் மறைமலையடிகள் தாம் எழுதிய "மாணிக்க வாசகர் காலம்" என்னும் நூலின் ருாக ஆவது பக்கத்தில் நன் கெடுத்துக் காட்டி யிருத்தலான் யமதக்கினியார் தமிழ் முனி வரே யென்பது தேற்றமாம். யமதக்கினியார் தமிழ் முனிவ ராதல் பெறப்பட்டமையால் அவர்தம் மகனார் திரணதூமாக் கினியார் தமிழுக்கோர் பேரிலக்கணம் செய்தார் என்றலும் ஒப்புக்கோடற் குரியதேயாம்.

இருக்கு மாமறை 'விசுவாமித்திரர் உறவினர்' என்றும் 'ஜமதக்கினிகள், என்றும் பலர்பாலாற் கூறக்கண்டும் ஜமதக் கினி யென்னும் பெயருடையார் பரசிராமர் தந்தை யொரு வரே யெனக்கோடலும் அவர்க்குத் திரணதூமாக்கினிப் பேருடைய மகனார் இருந்தார் என்றற்கு நூற்சான் றேதுமில தெனக் கூறலும் பொருந்துவனவோ? சொன்மின். அற்றேல், தொல்காப்பியர் தந்தையாராய யமதக்கினியார்க்கு வழங்கிய தனித்தமிழ்ப் பெயர்தான் யாதோவெனின், ஆரியரும் வட மொழிப்பற்றுடையாரும் தமிழ்ச் சான்றோர்தம் பெயர்களை யெல்லாம் மேற்கூறியாங்கு வடமொழியின் மொழிபெயர்த் தும் திரித்தும் வேறு பெயர் தந்தும் பல்லாயிர வாண்டுகளாக முயன்று தனித்தமிழியற் பெயரை யெல்லாம் அடியோடு வழங் காதொழித்தனராகலான் இஞ்ஞான்று அது கண்டு கூறலியலுவ தன்று; காலமென்னும் பேரிருட்பிழம்பின் ஆசியர் சூழ்ச்சி யென்னும் குப்பையுட் புதைந்து கிடக்கும் தனித்தமிழ்ப் பெரி யார்தம் வரலாறுகளாய ஒளிமிக்க முழு மாணிக்க மணிகளை ஆராய்ச்சியாளர் துருவிக்கண்டெடுத்து வெளியிட்டு வருகின் றமையான் இவ்யமதக்கினியார் வரலாறும் பின்னொருகால் வெளியாதல் கூடும்.

இனித் 'தொல்காப்பியன்' என்னும் சொற்றொடர்க்கு ஆசிரியர் நச்சினார்க்கினியர் 'பழைய காப்பியக் குடியினுள் ளோன்' என்று பொருள் கூறினராதலின் யமதக்கினியாரும் காப்பியக்குடியினராதல் வேண்டும்; அங்ஙனம் அவர் காப்பியக் குடியின ரென்றற்குச் சான்றொன்று மின்மையால் யமதக்கினி

யாரைத் தொல்காப்பியனார் தந்தை யென்றல் செல்லாதாம்பிற வெனின், அற்றன்று; யமதக்கினியார் தாமே இயற்றியதாக வேனும் அவர்தம் வரலாற்றை விளக்குவதாகவேனும் பழைய செந்தமிழ் நூலொன்று மின்மையால் தனித்தமிழ்ப் பெயராகிய காப்பியர் என்பது அவர்க்கு வழங்கச் சான்று கண்டிலேம்; மற்று, வடமொழி நூல்களே அவரைக் குறித்துக் கூறுகின்ற மையான் அந்நூல்களின் வடமொழியாளர் இட்ட யமதக்கினி யார் என்னும் பெயரே அவர்க்குப் பெரிதும் வழங்குவதாயிற்று, என விடுக்க.

தனித்தமிழ் முனிவராய தொல்காப்பியனார் இயற்றியதாக வேனும் இவர் வரலாற்றைக் குறிப்பதாகவேனும் நூலொன்று தானும் வடமொழிக்கண் உளதென எவரும் கூறக்கேட்டிலே மாகலான் இவரைத் திரணதூமாக்கினி என்னும் வடமொழிப் பெயரான் நச்சினார்க்கினியர் குறித்த தென்னையோ வெனின், இவர்தம் தந்தையார் வடமொழி நூல்களின் எடுத்தோதப் பெற்ற பெருமை யுடையார் ஆகலானும், இவரும் வடமொழி யிற் சிறந்த புலமை யுடையார் என்றற்கு "ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன்" என்னும் தொல்காப்பியப் பாயிரவுரையே போதிய சான்றுமாகலானும் இத்துணைச் சிறப்பு வாய்ந்த இவ ரைத் தம்மினத்தவ ராக்கிக் கொள்ள நினைந்து வடமொழி யாளர் தங்கள் மொழியில் திரணதூமாக்கினி என வழங்கின ராதல் வேண்டும் என்றறிக. இவர் இப்பெயரான் வழங்கப் பெற்றமை யறிதற்கு நச்சினார்க்கினியர் அடைந்த சான்று நமக்கின்னும் கிடைத்திலது.

காவிய: என்னும் வடசொற்றிரிபே காப்பியர் என்பது; இதனைத் தனித்தமிழ்மொழி யென்ற தென்னை? தமிழ் மொழியாயிற் பொருளியாதோ? எனின்; காப்பு என்பது காவல்; இயம் என்பது சொல்; தன்னை நினைவாரையும், ஓது வாரையும், கேட்பாரையும் தீநெறிக்கட் புகாமலும், துயர் வந்து சேராமலும் காக்கும் சொல்லே காப்பியம்; அது மறை மொழி (மந்திரம்) யாம். மந்திரம் என்னும் சொற்கு நினைபவ னைக் காப்பது என்று வடமொழியாளர் கூறும் பொருளையும்

காண்க. இது (காப்பியம்) மந்திர மொழிகளைத் தன்னகத்துக் கொண்ட தமிழ் மறையையும் ஆகுபெயராற் குறிப்பதாயிற்று. இத்தமிழ் மறையை ஆக்கினூரும் ஓதற்குரிமை யுடையாரும் ஆய குடியினரே காப்பியர் எனப் பெற்றனர். எனவே, காப்பியர் என்பது வடசொற்றிரிபன் றென்பதும், தூயதனித் தமிழ்ச் சொல்லே யென்பதும் பெறப்பட்டமை காண்க. இனித் தொல் காப்பியரைக் காப்பியர் என்று குறியாமல் தொல்காப்பியனூர் என்ற தேனெனின், ஆரியர் தொல்காப்பியனூர் காலத்துக்கு முன்னரே இப்பாரத நாட்டுட் போந்து தங்கள் மொழியில் சில பாடல்களை ஆக்கிக்கொண்டு அப்பாடற் றெகைக்கு வேதம் என்றும் அதை ஆக்கினூர்க்கும் ஓதுவார்க்கும் வேதியர் என் றும் பெயர் தந்து வழங்கத் தொடங்கி விட்டமையான் இவ்வட மொழி வேதத்துக்குப் பல்லாயிர ஆண்டுகட்கு முற்பட்ட தமிழ் மறையைத் தொல்காப்பியம் (தமிழிலக்கண நூலன்று) என்றும் அதை ஆக்கினூரும் ஓதற்குரிமை யுடையாரும் ஆய குடியினரைத் தொல்காப்பியர் என்றும் வேற்றுமை தோன்றக் கிளந்தெடுத் தோதுவாராயினூரென்க. இக் காப்பியக்குடி யினரே சாலப்பழைய நாளின் இருந்த தமிழரசர்க்கு ஆசிரிய ராகவும் அமைச்சராகவும் அமர்ந்து விளங்கிய உண்மையையும் சிறிது காட்டுவாம்.

பண்டைக் காலத்தே எல்லா வகையானும் சிறந்து விளங் கிய தமிழரசரை வடமொழியாள ரெல்லாரும் அசுரர் என்னும் பெயரான் வழங்கிவந்தமை ஆசிரியர் மறைமலையடிகள் எழு திய 'பண்டைக்காலத் தமிழரும் ஆரியரும்' என்னும் நூலின் இனிதெடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றது. அசுரர் என்னும் சொல் தமிழ் மன்னரைக் குறிக்கவே அசுரகுரு என்றும் அசுர மந்திரி என்றும் எல்லா நூல்களானும் எடுத்தோதப் பெறும் வெள்ளி தமிழ் மன்னர்க்கு ஆசிரியனும் அமைச்சனுமாக இருந் தானே யென்பது திண்ணம். இவ்வெள்ளி காப்பியன் என்னும் பெயரால் வழங்கப்படுகின்றூ னுகலான் இவன் தமிழ்க் காப்பியக் குடியினனே யென்ப தொருதலை. இக்காப்பியன் என்னும் சொல்லை வடமொழியாளர் காவிய: என்று திரித்து வழங்குவா

ராயினர். இதனால் தமிழ்க் காப்பியக்குடியினர் தமிழ் மன்னர்க்கு ஆசிரியராகவும் அமைச்சராகவும் இருந்தமை வெளியாயிற்று. இவ்வெள்ளியின்பால் ஆரிய மரபினரும் சென்று மாணாக்கராய் இருந்து மந்திரங் கேட்டமை வியாழன் மகன் கயன் என்பான் வரலாற்றால் பெறப்படலானும், இவர் தமக்கும் தங்குடிக்கும் இழிவு தேடுவாரை எளிதின் விடுவாரல்லரென்பது இவரைக் குறித்த எல்லா நூல்களினும் காணக்கிடத்தலானும், ஆரியராயினர் இவர்க்கு அஞ்சி வாழ்ந்தன ரென்றும், அவ்வச்சத்தாலேயே காப்பியர் என்னும் அவர் தங்குடிப் பெயரை ஒளியாமல் காவியர் என்று திரித்து வழங்குவாராயினர் என்றும் ஊகித்துணர்தல் தவறாகாது.

இக்கட்டுரையிற் கண்ட பொருள் முற்றும் முடிந்த முடிபெனக் கூறுந் துணிவுடையே னல்லேன். வேறு பல வலிய சான்றுகள் கிடைப்ப அவை துணையாக இக்கட்டுரைப் பொருள் முற்றுமோ சில பகுதியோ மறுக்கப்பெறலும் ஆவதேயாம்.

---

# கடவுளுக்கும் உயிருக்குமுள்ள அத்துவித இயைபு

[திருவாளர் மா. வே. நெல்லையப்ப பிள்ளை அவர்கள்]

[சிலம்பு ω, பரல் ௬, ௱௮௧-வ௯ பக்கத் தொடர்ச்சி]

## XI அத்துவிதப் போது இயைபும் மக்கட் பொதுநலப் பயனும்

௧௬. இனி அத்துவிதப் பொதுஇயைபு உண்மை எத்துணை உலகநடை முறையில் மக்கட் பொதுநலப்பயன் தரக்கூடியது என்பது சிறிது கருதுவாம். அத்துவிதப் பொது இயைபு உண்மை உலக நடை முறையில் விளங்கும் உண்மைகளுக்கெல்லாம் தாயகமாய் விளங்குகின்றது. அத்தாயக உண்மையினின்றே கடவுளுடைய அருட்செயலால் விளங்குகின்ற உலகில் நாம் காண்கிற ஏனைய உண்மைகளெல்லாம் பிறக்கின்றன.

கடவுளோடு இயைபுபடாத உண்மைகள் அவனது அருள்வலி விளங்கும் உலகில் எவ்வாறு தோன்ற முடியும்? இத்தகைய அத்துவிதப் பொதுஇயைபு உண்மையானது ஸ்மார்த்தம் மாத்துவம் வைணவம் சைவம் ஆகிய நான்கு இந்து சமயப் பகுதிகளிற் கூறப்பட்டிருத்தல்போல் உலகிலுள்ள ஏனைய சமயங்களிற் கூறப்படவில்லை. இயற்கை நிகழ்ச்சி உண்மைகளை ஆராய்ந்து அவ்வுண்மைகளைச் சார்ந்து தத்துவம் (Philosophy) கூறும் மேற்கு நாட்டுத் தத்துவ நூலார்களும் (Philosophers) அத்துவிதப் பொதுஇயைபு உண்மையைக் கூறவில்லை. மேற்கு நாட்டுப் பெருமக்கள் சமயமாகிய கிறிஸ்து சமயப் பகுதிகளிலும் அத்துவிதப் பொதுஇயைபு உண்மை கூறப்படவில்லை. அத்துவிதப் பொதுஇயைபு உண்மை கூறும் இந்து சமயப் பகுதிகளிலும் சைவசமயந் தவிர ஏனைய இந்து சமயப் பகுதிகள் ஒன்றாய் நிற்கும் நிலை, வேறாய்நிற்கும் நிலை, உடனாய்நிற்கும் நிலை ஆகிய மூன்று நிலைகளில் ஒவ்வொரு நிலையையே கூறுகின்றன. சைவசமயம் ஒன்று மாத்திரம் தான் கூறும் அத்துவிதப்பொது இயைபு உண்மையில் மேலே கூறியபடி மூன்று நிலைகளும் அடங்கும்படி கூறுகின்றது. இதுவன்றி, பின்னே கூறுகிறபடி சைவசமயம் அத்துவிதச் சிறப்புஇயைபு உண்மையுங் கூறுகின்றது.

௧௭. மேலே கூறியபடி கடவுள் தனது நிறைவு வேட்கை அறிவு செயல்களால் எல்லா மக்கள் உயிர்களுடனும் நீக்கமற நிறைந்து கலந்து நிற்கும் பொதுத்தன்மையே அத்துவிதப் பொது இயைபுக்குக் காரணமாயுள்ளது. "எவ்வுயிரு நீங்காதுறையு மிறை சிவனென் றெவ்வுயிர்க்கு மன்பாயிரு" என்று சைவ சமயநெறி கூறுகின்றது. மக்களெல்லாரிடத்திலும் விளங்கும் இந்தப் பொதுத்தன்மையே மக்களை ஒருவருக்கொருவர் நலத்துக்கும் கேட்டுக்கும் இணைத்துப் பிணைத்துக் கூட்டிவைக்கும் தொடர்பை (Relation ship) உண்டுபண்ணுகிறது. இந்தப் பொதுத் தன்மையே ஒருவருடைய நலத்தைப் பிறரெல்லாருடைய நலமாகவும் ஒருவருடைய கேட்டினைப் பிறரெல்லாருடைய கேடாகவும் ஆக்கவல்லது. இந்தப் பொதுத்தன்மையானது மக்களெல்லாரையும் அவர்களுடைய நலத்துக்காக இணைத்து

முறைமையில் ஒற்றுமைப் படுத்தும்பொழுது அன்பு அல்லது சகோதர உணர்ச்சி (Brotherly Feeling) என்று கூறப்படும். இந்த அன்பொழுக்கமே நல்லொழுக்கமாகும். உலக நலத்தை விளைக்கிற எல்லா நற்குணங்களும் இந்த அன்பாகும் தாயிலிருந்தே பிறக்கின்றன. மக்கள் இந்தப் பொதுத்தன்மையை அறியாது ஒருவருக்கொருவர் தீங்கு கருதி இகலி வேறுபட்டு ஒழுகும் ஒழுக்கம் பகைமை யொழுக்கமாகும். இப்பகைமையாகிய தாயிலிருந்து உண்டாகாத தீய குணங்களொன்றுமில்லை. இந்தப் பகைமையிலிருந்து உண்டாகும் பொய், வஞ்சனை, ஏமாற்றம், காவு, பிறரை வலுவில் அடக்கி ஆண்டு தற்பயன் கொள்ளுதல் (Domination and exploitation) பிறரைத் துன்புறுத்தல் முதலிய தீயகுணங்களெல்லாம் உண்டாகின்றன. இந்தத் தீய குணங்களெல்லாம் தற்காலத்தில் உலகில் எங்கும் மலிந்து நிகழ்தலினாலேயே எங்கும் மக்களுக்குள் கலகமும் குழப்பமும் அமைதியின்மையும் பணமுடையும் வேலையில்லாத் திண்டாட்டமும் அவைகள் காரணமாக மிக்க துன்பங்களும் உண்டாயிருக்கின்றன.

கஅ. மேற்கு நாட்டில் மக்கள் ஒருவருக்கொருவர் பல ஆண்டுகளாகச் செய்த தீவினைகளின் பயனாக அவ்வினைப்பயன் கழிதற்குச் சென்ற 1914—18 ஆண்டுகளில் கொடும்போர் நிகழ்ந்தது. அக்கொடும்போருக்குப் பின் இனி இத்தகைய போர் உலகில் உண்டாகாமல் மக்கள் சமாதானமா யின்புற்று வாழவேண்டுமானால் எல்லா நாட்டாரும் ஒருவர் மற்றொருவரை நலிவு செய்யாமல் ஒருவருக்கொருவர் சகோதர உணர்ச்சியுடன் ஒழுகல் வேண்டுமென்ற கருத்து மேற்கு நாட்டு அறிஞர்களுக்குள் உண்டாகி வளர்ந்து வருகிறது. அக்கருத்தை அடிப்படையாகக்கொண்டு மேற்கு நாட்டில் 'மக்கட் பொதுநலக் கழகம்' (League of Nations) தோன்றி, கூடியவரை நாடுகளுக்குள் உண்டாகும் போரை விலக்கியும் போருக்குக் காரணமாயுள்ள வேறுபாடுகளை ஒழித்தும் வேலை செய்து வருகின்றது. இன்னும் சமயக் கூட்டுறவுக்கழகம் (Fellowship of Faith) உலக சமாதான இயக்கம் (World Peace movement) முதலிய நல்ல

இயக்கங்கள் பல தோன்றி மக்களுக்குளிருக்கிற பகையை ஒழித்து அன்பையும் சமாதானத்தையும் நிலைபெறச் செய்ய வேலை செய்து வருகின்றன.

௧௬. மேலே ௧௭, ௧௮ பத்திகளிற் கூறியவற்றால் நமது நாட்டில் கடவுளினது அருள் விளக்கம் பெற்று மெய் அறிவு அடைந்த சைவசமயப் பெரியார்கள் உணர்ந்து சொன்ன அத்துவிதப் பொது இயைபிலிருந்து நேரே பெறப்படும் அன்பொழுக்கமானது மக்கள் உலகில் இன்புற்று வாழ்தற்கு இன்றியமையாது வேண்டப்படுவது என்று மேற்கு நாட்டுக் கூர்த்த உலக அறிஞர்கள் தங்கள் நீண்ட கால உலக அனுபவத்தை ஏதுவாகக் கொண்டு இப்பொழுது வற்புறுத்திக் கூறுகின்றார்கள் என்பது நன்கு புலனாகும். அதாவது சைவசமய மெய்அறிவுப் பெரியோர்கள் மேலான அறிவு நிலையில் நின்று இன்ன காரணத்தினால் இன்ன காரியம் உண்டாகுமென்று கூறின உண்மையை மேற்கு நாட்டு உலகஅறிவுப் பெரியோர்கள் நீண்ட காலம் உலகினுண்டான நிகழ்ச்சிகளாகிய அநுபவங்களை ஏதுவாகக் கொண்டு உலகில் இனி இன்ன காரியம் (உலக இன்பம்) நிகழ வேண்டுமானால் இன்ன காரணம் (அன்பொழுக்கம்) இருத்தல் வேண்டும் என்று இப்பொழுது ஒருவாறு அறிந்து கூறுகின்றார்கள். சைவப் பெரியார்கள் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே காரணத்திலிருந்து காரியத்தை அறிந்தார்கள்; மேற்கு நாட்டுப் பெரியார்கள் காரியத்திலிருந்து காரணத்தை இப்போது கருதி அறிகிறார்கள். ஆனாலும் சைவப்பெரியோர்கள் கூறின அத்துவித பொது இயைபு உண்மையிலிருந்து பெறப்படும் அன்பொழுக்கமானது மக்களுக்குள் மாத்திரமல்லாமல் மக்களுக்கும் ஏனைய உயிர்களுக்கும் இருத்தல் வேண்டும் என்று கூறுதல்போல மேற்கு நாட்டுப் பெரியார்கள் பொதுவாக இப்பொழுது கூறவில்லை. எல்லா உயிர்களும் சகோதரர்கள் என்ற கருத்து இப்பொழுது சென்ற 56 ஆண்டுகளாக பிரமஞான சங்கத்தார் உலகில் கூறிக்கொண்டு வருதலாலும் பிற சில காரணங்களாலும் மேற்கு நாட்டிலும் நமது நாட்டிலும் சிறுபான்மை பரவியும் அதுபற்றிச் சிறுபான்மை புலாலுண்

னல் விலக்கப்பட்டும் வருகின்றது. இன்னும் அந்தக் கருத்து உறுதி அடைந்து மக்கட்பொது ஒழுக்கத்துக்கு எந்நாட்டிலும் வரவில்லை. அது மக்கட்பொது ஒழுக்க நடைமுறைக்கு வந்தால் மாத்திரம் புலாலுண்ணுதலும் உயிர்ப் பலியிடுதலும் விலக்கப் பட்டு ஏராளமான உயிர்கள் கொல்லப்படுதல் ஒழியும். மக்கள் தங்களுக்குள் மாத்திரமன்றித் தங்களுக்குக் கீழ்ப்பட்ட ஏழை உயிர்ப் பிராணிகளிடத்திலும் அன்புசெய்து ஒழுகுதலினாலேயே அவர்கள் கடவுளிடத்துச் செய்யும் அன்பு நிறைவை அடையும். அப்பொழுதுதான் "மேன்மைகொள் சைவ நீதி உலகெலாம் விளங்கும்."

உ௰. அன்பர்களே! இதனால் சைவசமய உண்மைகளும் அவைகள் பற்றி உலகில் ஒழுகப்படும் சைவசமய ஒழுக்கமும் உலகில் மக்கள் துன்பம் நீங்கி இன்பம் அடைதற்கு இன்றியமையாது வேண்டப்படுவன என்று விளங்குகின்றது. உலகம் இப்பொழுதிருக்கிற துன்ப நிலையில் அத்துவிதப் பொது இயைபு உண்மையை ஓதி அறிந்து உணர்ந்த சித்தாந்த சைவர்கள் பொதுவாக எல்லா உலகிற்கும் சிறப்பாகச் சைவ உலகிற்கும் செய்யவேண்டிய கடமை என்ன ? உலக நிலையைப் பார்த்துக்கொண்டு வாளா இருப்பதன்று அவர்கள் கடமை. அவர்கள தாங்கள் அறிந்த மக்கட் பொதுநலக் கருத்துக்கள் உலகில் நடைமுறைக்கு வரும் வழியில் அவைகளை விளக்கும்படியாயுள்ள அன்பொழுக்கத்தை மேற்கொண்டு ஒழுகுதலன்றி உலகெங்கும் பரவுதற்குப் பத்திரிகைக்கு எழுதியும் சொற்பொழிவுகள் செய்தும் வருதல் வேண்டும்.

(தொடரும்)

# தமிழ் அறிவியற் சொற்கள்

## Geometry—உருவரைக் கணக்கு

[திரு.பா.வே. மாணிக்கநாயக்கர்—காழி. சிவ. கண்ணுசாமி B.A.]

(௱அ௫-வது பக்கத் தொடர்ச்சி)

Complement என்ற ஆங்கிலச் சொல்லுக்கு நிறைவிப்பது என்பது பொருள். உருவரைக் கணக்கில் ஒரு முழு முடக்கு என்ருல் செம்முடக்கையே குறிக்குமாதலால், Complementary angle என்பதற்கு, குறிக்கப்பட்ட ஒரு முடக்குடன் சேர்ந்து அம்முடக்கை ஒரு முழு முடக்காக்கும் முடக்கு என்பதே பொருளாகும். To Complete என்பதற்கு நிறைக்க அல்லது முழுதாக்க என்றும், Complement என்பதற்கு நிறைப்பு அல்லது முழுதாக்கல் என்றும் பொருள் கொள்ளப்படுதலால், Complementary angle என்பதற்கு நிறைக்கு முடக்கு அல்லது முழுதாக்கு முடக்கு என்று பொருள் கோடல் வேண்டும். இரு முடக்குகளின் கூடுதல் ஒரு முழு முடக்கிற்குச் சரியாஞல் அவ்விரு முடக்குகளும் ஒன்றற்கொன்று நிறைக்கு முடக்கு அல்லது முழுதாக்கு முடக்கு எனப்படும். (If the sum of two angles is a right angle then the two angles are complementary angles.)

Supplement என்ருல் சேர்ப்பது என்பது பொருள். ஆனல் முடக்கைப் பொறுத்த வரையில் குறித்த ஒரு முடக்குடன் சேர்ந்து இரு முழு முடக்கு அல்லது ஒரு நேர்வரையாக்கும் ஒரு முடக்கு என்பதே பொருள். To supplement என்ருல் சேர்க்க என்று பொருள். Supplementary angle என்ருல் சேர்க்கை முடக்கு அல்லது சேர் முடக்கு எனப் பொருள் கொள்ளல் வேண்டும். இப்பொருளை இன்னும் செம்மைப்படுத்தி நீட்டு முடக்கு என்று பொருள் கொள்ளலாம்.

| | |
|---|---|
| Complementary angle | நிறைக்கு முடக்கு |
| Supplementary angle | நீட்டு முடக்கு |

| | |
|---|---|
| Side | சிறை |
| Both sides | இருசிறை |

That which has sides - சிறைஇ. (இங்கே "இ" என்பது உடையது என்னும் பொருட்டு) Side என்பது பக்கமாகாதோவெனின் ஆகும். ஆயினும் அது சிறை என்பதைப் போன்று சொல்லாக்கத்திற்குப் பயன்படக்கூடியதன்றாகலின் பின்னதே சிறப்புடைத்தாம்.

| | |
|---|---|
| Bilateral | இருசிறைஇ |
| Trilateral | முச்சிறைஇ |
| Quadrilateral | நாற்சிறைஇ |
| Pentilateral | ஐஞ்சிறைஇ |
| Hexalateral | அறுசிறைஇ |
| Septalateral | எழுசிறைஇ |
| Octalateral | எண்சிறைஇ |

(பிறவு மின்ன)

| | |
|---|---|
| Polylateral | பல்சிறைஇ |
| Equilateral | சரிசிறைஇ |
| Equilateral Triangle | சரிசிறை மும்முடக்கி |
| Isosceles | சரிகால, சரிகாலி |
| (Isos-equal-சரி; seale-leg — | கால்) |
| Isosceles Triangle | சரிகால மும்முடக்கி |
| Opposite sides | எதிர் சிறைகள் |
| Rectilinear | நேர்வரையிய அல்லது நேர்வரைஇ |
| Scalene | ஒவ்வாச்சிறையிய, ஒவ்வாச்சிறைஇ |
| Scalene Triangle | ஒவ்வாச்சிறை மும்முடக்கி |

Irregular Triangle—இது ஒவ்வாச்சிறை மும்முடக்கியை யொத்ததே யாயினும் முறையில் மும்முடக்கி என்றே அழைக்கற்பாலதாகும். Regular Triangle - முறை மும்முடக்கி.

Square என்பதற்கு, உருவரைக் கணக்குப்படி, நாற் சிறைகளும் நான் முடக்குகளும் சரியாக இருக்கும் ஒரு வடிவு என்பதே பொருளானாலும், வேர்ப்பொருள் "நான்கிணையுடையது" என்பதேயாகும். சதுரம் என்னும் சமஸ்கிருதச் சொல்லுக்கும் மேற்குறித்த வேர்ப்பொருளைவிடச் சிறந்ததொரு பொருள் கொள்ளல் முடியாது. எனவே சொல்லாக்கப் புகுந்த நாம் அறிவியலுக்குப் பொருந்துமாறு ஏன் ஓர் ஏற்ற சொல்லைத் தேர்ந்து கோடல் கூடாது? சரிசிறை செம்முடக்கி அல்லது சரிசிறை முழுமுடக்கி என்பதே Square என்ற சொல்லுக்குரிய செம்பொருளை நன்கு தெரிவிப்பதாகும். ஆயினும் இது நீண்டதொரு சொற்றொடராயிருப்பதால் குறுகியதொரு தொடரைக் குறிக்கவேண்டும். நாற்சிறைகளும் நான் முடக்குகளும் சரியாக இருக்கக்கூடிய உருவம் முறையானதொரு நான்முடக்கியாகவே யிருத்தல் வேண்டும்; எனவே Square என்பது முறை நான்முடக்கியாகும்.

| | |
|---|---|
| Adjacent sides | அடுத்த சிறைகள் |
| To bisect | இரு கூறிட என்பதே நேர் பொருளாயினும் இருசரிகூறிட என்பதே அறிவியற்குரிய பொருளாகும். |
| To bisect an angle | முடக்கிரு கூறிட, முடக்கிரு சரி கூறிட. |
| To bisect a line | வரையிரு கூறிட, வரையிருசரிகூறிட |
| To trisect | முக்கூறிட, முச்சரி கூறிட. |
| To quadrisect | நாற்கூறிட, நாற்சரி கூறிட |
| To Intersect | இடைவெட்ட |
| Intersection | இடை வெட்டு |
| Intersecting line | வெட்டுவரை |
| Oblique | சாய்ந்த, சாய் |
| Oblique Sides | சாய்சிறைகள் |

Oblong என்பதற்கு அகலத்தைக் காட்டிலும் நீளம் அதிகமாயுள்ள ஒன்று என்பது நேர் பொருள். இப்பொருளில்

முடக்குகளின் அளவைக்குறித்து ஒன்றுமில்லை. ஆயினும் வழக்காற்றில் நாற்செம்முடக்குகளுடன் நாற்சிறையினதாய், அகற்சியைக் காட்டினும் நீட்சி மிகுதியாயுள்ளதொரு வடிவம் ஒன்றனையே அது குறிக்கும். நீண்ட சதுரம் அல்லது நெடுஞ் சதுரம் என்று அஃது இப்பொழுது அழைக்கப்படுகிறது. சமஸ்கிருதமும் தமிழுங் கலந்த ஒரு கலவைத்தொடராக அஃது இருப்பதோடன்றி முரண்பொருள் கொண்டதாயுமிருக்கிறது. வட்ட மும்முடக்கி, நேர்வளைவு என்று கூறுவது எவ்வளவு நகைப்பை யளிக்குமோ அவ்வளவு நகைப்பையே இந்த நீண்ட சதுரம் என்பதும் விளைக்கிறது. சதுரம் என்ற ஒன்று எவ்வாறு நீண்டதாயிருக்கக்கூடும்? குளிக்கப்போய்ச் சேற்றைப் பூசிக்கொள்வது போலன்றோ இஃது இருக்கிறது? நெடுஞ்செம் முடக்கி அல்லது நெடு முழு முடக்கி என்பதே நேர்பொருளாகக் கொள்ளற்பாலதாகும்.

| | |
|---|---|
| Collinear | ஒரு வரைய, ஒருவரையின |
| Convergent | குவி |
| Divergent | விரி |
| Convergent lines | குவி வரைகள் |
| Divergent lines | விரி வரைகள் |
| Horizontal | மட்டமான |
| Horizontal line | மட்ட வரை |
| Parallelism | ஒருபோக்கு, ஒருபோகு |
| Parallel lines | ஒருபோகு வரைகள் |
| Parallel curves | ஒருபோகு நெளிகள் |
| Parallelogram | ஒருபோகு சிறையினது<br>ஒருபோகு சிறைஇ |

Rhombus என்பது நான்கு சிறைகளும் சரியாயும், எதிர் சிறைகள் ஒரு போகினதாயும் இருக்கும் நாற் சிறைஇ; ஆகவே சரியான பொருள் ஒருபோகு சரி சிறைஇ என்பதாம்.

| | |
|---|---|
| Circle | வட்டம் |
| Circular | வட்டமான, வட்ட |

| | |
|---|---|
| Circumference | சுற்று வட்டம் |
| Centre | மையம் |
| Circumscribe | சுற்றும்புறம் வரைய, புறம் வரைய |
| Inscribe | உள் வரைய |
| Arc | வட்டை |
| Segment | வட்டக்குறை (இது தலையற்ற உடலை உடற்குறை என்பது போல) |
| Semi circle | அரை வட்டம் |
| Chord | ஞாண், நாண் |
| Chord of an arc | வட்டை நாண் |
| Chord of a segment | வட்டக்குறை நாண். |
| Concave | குழிந்த, வளைவுள்ளிட்ட |
| Concave side | குழி சிறை, வளையுள் சிறை |
| Convex | பிதுங்கிய, வளைபுறத்த |
| Convex side | பிதுங்கு சிறை, வளைபுறச் சிறை |

Diameter என்பதற்கு வட்டத்தினூடு உள்ளளத்தல் என்பது நேர் பொருள். வட்டத்தில் உள் வரையக்கூடிய நீண்ட நேர்வரை அதுவே. எனவே, உருவளவு என்பதே சரியான சொல்லாகும். உருவு என்பது ஊடறுத்துச் செல்லும் பொருளில் நாட்டுப்புறங்களில் தச்சர்களாலும் கருமான் களாலும் வழங்கப்பட்டு வருகிறது.

| | |
|---|---|
| Radius | கதிர் |
| Radium | கதிரி |

Section வட்டக்கூறு, வட்டச்சுளை, (சுருக்கமாக) சுளை

Quadrant என்றால் நான்கிலொரு கூறு என்பது நேர் பொருளாயினும் வட்டத்தில் நான்கிலொரு கூறு என்பதே செம்பொருளாகும். ஆகவே வட்ட நாற் கூறு என்பதே அறிவியற் செம்பொருள். நாற் கூறு சுளை என்பது தெளி பொருட் சொல்.

Sextant — வட்டத்தறுகூறு, அறுகூறு சுளை
Octant — வட்டத்தெண்கூறு, எண்கூறு சுளை
Tangent — என்பதற்கு நேர்பொருள் தொடுவது என்பதாகையால் தொடுவரை எனப்பொருள் கோடல் சிறந்ததாகும்.
Secant — வெட்டு வரை
Point — முனை
Point of Intersection—வெட்டு முனை
Point of contact — தொடு முனை

(தொடரும்)

---

# மாதர் மயக்கம்

(கோவை. ம. இராமச்சந்திர செட்டியார், B.A.)

நமது நாட்டில் வேதாந்தக் கீர்த்தனைகளிலும் ஏனைய சமய நூல்களிலும் மாதர் மயக்கத்தைக் குறித்து மிதமீறிக் கூறியிருப்பதை நாம் காண்கிறோம்.

"பொன்னில மாதர் ஆசை" என்றும்
"பொன்னை மாதரைப் பூமியை நாடிடேன்"

என்றும் கூறியிருப்பதில் பொன், நிலம், என்ற இரண்டு அஃறிணைப் பொருள்களுக்குச் சமமாக மாதரைக் கூறியிருப்பது நோக்கத்தக்கது. மாதரிடம் கொள்ளும் மயக்கமானது ஒருவருடைய ஆன்மா ஈடேறுவதற்கும் பேரின்பம் அடைதற்கும் தடையாக இருக்கிறது என்பது நம் பெரியார்களின் எண்ணம். ஆனல் மாதர் மயக்கம் ஆண்களுக்கு எத்துணை தடையோ அத்துணை ஆண்கள் மயக்கம் பெண்களுக்கும் இருக்கும் அன்றோ? எனினும் ஆண் மயக்கத்தைக் குறித்து எவரும் இத்துணை வற்புறுத்திக் கூறியது கிடையாது.

மோகவலை வீசித் தம் வசப்படுத்தி நற்குணத்தைக் கெடுக்

கும் பரத்தையர் மயக்கத்தைப்பற்றி மாத்திரமோ நம் நூல்கள் கண்டிக்கின்றன! அதுமாத்திரம் அன்று. பொதுவாகப் பெண்களிடத்தில் கொள்ளும் காதல் எல்லாமே நம் ஆன்மாவின் ஈடேற்றத்திற்குத் தடை என்று கவிஞர்கள் கூறுகின்றனர். ஏனைய நாடுகளிலோ அல்லது பிற சமயங்களிலோ பெண்களை மணப்பதற்கும் அவர்களிடம் காதல் கொள்வதற்கும் சமயச் சார்பாக யாதொரு தடையுமில்லை. மகம்மதிய மதத்தில் எத்தனை பெண்களை மணந்தாலும் அவர்களுடன் எவ்வளவு காலம் சிற்றின்பத்தில் வாழ்ந்தாலும் சுவர்க்கத்திற்குச் செல்வதற்கு யாதொரு தடையுமில்லை. அம்மதத்தில் குரானில் கூறியிருக்கும் ஏனைய அறங்களைப் பின்பற்றினால் போதுமானது. கிறிஸ்து மதத்திலோ அவ்விதமே மணம் செய்துகொண்டு இல்லறத்தில் வாழ்பவருக்கும் சுவர்க்க வாசல் திறந்து கிடக்கும். ஆனால் நம் நாட்டு வேதாந்திகளும் சமயப்புலவர்களும் பெண்கள் ஆசையை ஏன் கண்டித்திருக்கிறார்கள்? அவ்வெண்ணம் தமிழருள் எவ்விதம் வளர்ந்தது என்பதைச் சிறிது ஆராய்வோம்.

தமிழில் சங்கத்தார் காலத்தில் பொதுவாகப் பெண்மக்களை எவரும் பழித்து எழுதவில்லை. அதற்கு மாறாக, காதலின் பெருமையை நன்றாக அறிந்து அதை மிகவும் பாராட்டினதன்றி அதை நன்கு விளக்கிப் பாகுபடுத்தி இலக்கணமாக்கி 'அகத்துறை' எனப் பெயர் தந்து தம் இலக்கியங்களில் புகுத்தியு மிருக்கின்றனர். ஆண்கள் பெண்களைத் தம் இனமக்களாகக் கருதி, இருபுறமும் ஒருங்கு செலுத்தும் காதலைப் பெருமை வாய்ந்த காதலாகக் கொண்டு வழிபட்டு வந்தார்கள். பெண்கள் ஆடவர்களுடன் திருவிழாக்களில் சமமாக இருந்து வழிபட்டதும் காண்கிறோம். அவ்விதக் காதல் மறுமைக்குத் தடை என்ற எண்ணமே எங்கும் இல்லை. பரத்தையரிடம் கொள்ளும் காதல் இழிவுடைத்தாயினும் அஃது இகத்தில் அடையும் துயரத்திற்குக்காரணமாய் இருந்ததே அன்றிப் பரத்திற்குத் தடையாக இருந்ததாக வெளிப்படையாகவும் அதிகமாகவும் கூறியுள்ளதைக் காண்கிலோம். ஆகவே சங்கத்தார் காலத்

நில் மாதர் நிலையும் அவர்களிடம் ஆண்கள் வைத்திருந்த மனப் பான்மையும் தற்காலத்தில் இருப்பதைவிட்டு மாறுபட்டது எனக் கொள்ளலாம்.

இனி, சைவ சமயாசாரியர்கள் காலத்தில் இருந்த மனப் பான்மையை ஆராய்வோம். சம்பந்தர் சிறு பிள்ளையாக இருந்த போதே பதிகங்கள் அருளினமையாலும் தம் பதினாறுவது ஆண்டில் மணம் புரிந்து ஐக்கியமாகி விட்டபடியாலும் மாதர் களைப்பற்றிப் பாடவேண்டிய அவசியம் இருக்கவில்லை. அப்பர் சுவாமிகளும் மணமே செய்து கொள்ளாமல் முற்றும் துறந்த துறவியானதினாலும் அவருக்கு மாதர் மயக்கத்தைக் குறித்துக் கூறவேண்டிய அவசியமில்லை. ஈசனிடம் அன்பைத் தவிர அவர் வேறொன்றும் அறியார். ஆனால் இறுதிக் காலத்தில் திருப்பூந் துருத்தியில் அவரைப் பரீட்சிக்க வந்த மணி, மாதர் இவைகளி டம் யாதோர் எண்ணமும் கொள்ளாத பெரும் நிலையில் இருந் தார். சுந்தரமூர்த்திகளோ ஒரு மணத்தைத் தவிர்க்கப் பெற் றும் இரு பெண்களை மணந்து கொண்ட நிலையில் இருந்தார். அப்பெண்களுக்காகப் பாடுபட்டுப் பொருளும் பெற்றார். அத் தன்மையில் மணம் கொள்ளுதல் பேரின்பத்திற்குத் தடையாக இருக்கவில்லை யன்றோ?

ஆனால் மணிவாசகப் பெருமானின் கருத்தோ இவை களுக்கு எல்லாம் மாறுபட்டிருக்கின்றது. அப்பெரியார் பெண்களிடம் சிக்கி வருந்தினதாக அவர்களுடைய சரித்திரத் தில் நாம் காண்கிறோமில்லை. எனினும் அவர் பாசுரங்களில் பெண்களின் மயக்கத்தையும் குரூரத்தன்மையையும் வற்புறுத் திக் கூறி யிருக்கின்றனர்.

'கருங்குழல் செவ்வாய் வெண்ணகைக் கார்மயில்
ஒருங்கிய சாயல் நெருங்கியுள் மதர்த்துக்
கச்சற நிமிர்ந்து கதிர்த்து முன்பணைத்
தெய்த்திடை வருந்த வெழுந்து புடைபரந்
தீர்க்கிடை போகா இளமுலை மாதர்தம்
கூர்த்த நயனக் கொள்ளையில் பிழைத்தும்"

(போற்றித் திருவகவல்.)

"தையலார் எனும் சுழித்தலைப்பட்டு நான்
தலைதடு மாறுமே
பொய் யெலாம் விடத்திருவருள் தந்துதன்
பொன் னடியிணைக் காட்டி
மெய்யனாய் வெளிகாட்டி முன்னின்றதோர்
அற்புதம் விளம்பேனே"

"கருங்குழலினார் கண்களாலே ஏறுண்டு
கலங்கியே கிடப்பேனை"
—மங்கையர் தம்மோடும்

"கூடியவ்குள குணங்க ளாலேறுண்டு
குலாவியே திரிவேனை—"
(அற்புதப் பத்து)

முதலான மேற்கோள்களினாலே மாதர்களால் ஏற்படும் மயக்கத்தைக் கண்டிப்பதோடு, தாமும் அதில் விழுந்ததாயும் அதிலிருந்து ஈசன் தம்மை விடுவித்ததாயும் கூறுகிறார். மாணிக்கவாசகர் காலத்தை எழுதின திரு. மறைமலையடிகள், மணிவாசகர் இல்லறத்தில் இருந்ததாகக் கூறுகின்றனர். மேற்கூறிய மேற் கோள்களினால் அவர்கள் இல்லறத்தில் ஈடுபட்டுத் துன்புற்றிருக்க வேண்டுமென்று தோன்றுகிறது. ஆனால் வேறு சான்றுகள் கிடைக்குமட்டும் நாம் உறுதியாக இதை ஏற்றுக்கொள்ள மயங்குகிறோம்.

நிற்க, நமது நாட்டுப் புலவர் பெருமக்கள் இலக்கிய இலக்கண விசேஷத்தை ஒட்டிச் சில அபிப்பிராயங்களைக் கூறுவதுண்டு. அவை உண்மையாக இருக்கவேண்டிய அவசியமில்லை. அதை ஆங்கிலத்தில் Conventional என்பார்கள். அதை ஒட்டி மாணிக்கவாசகர் இவ்விதமாகப் பாடி யிருக்கலாம் என்னலாம். ஆனால் அவ்வித நடைப்போக்கு ஏற்படுவதற்கு முந்தி வெகு காலம் மட்டும் அவ்வித நோக்கத்தை முந்திய புலவர்கள் கொண்டிருக்க வேண்டும். அதை அனுசரித்தே பிந்திய புலவர் பாடி யிருத்தல் கூடும். மாணிக்க வாசகருக்கு முந்தி அவ்வித எண்ணப் போக்கு கொண்ட புலவர் பெருமக்கள் இருந்தனராகத் தெரியவில்லை. ஆகவே உண்மையில் மாணிக்கவாசகர் இக்கொள்கைகளைக் கொண்டிருக்கவேண்டும் என்னலாம்.

மாணிக்க வாசகருக்குப் பின் சில நூற்றாண்டுகளாக இவ் வெண்ணம் பாராட்டப் பெறவில்லை. பிறகு மற்றோர் பெருந் துறவியாகிய பட்டினத்தடிகள் இவ்வெண்ணத்தைப் பன் மடங்கு வற்புறுத்தி யிருக்கின்றார்.

"காதள வோடிய கலகப் பாதகக்
கண்ணியர் மருங்கில் புண்ணுடனுகும்
காதலும் கருத்தும் அல்லால்—"

(கோயில் திருவகவல்)

"இருமால் பயர்த...............
மாதரை மகிழ்ந்து காதல்கொண்டாடும்
மானுடர்க் கெல்லாம் யானெடுத் துரைப்பேன்.........."

என்பது முதல்கொண்ட கச்சித் திருவகவல் முழுதும்.

"காதென்றும் மூக்கென்றும் கண்ணென்றும்
காட்டியென் கண்ணெதிரே
மாதென்று சொல்லி வருமாயை தன்னை
மறவிவிட்ட
தூதென்று எண்ணுமல் சுகமென்று
நாடு மித்தீர்ப்புத்தியை
ஏதென் றெடுத்துரைப்பேன் இறைவா
கச்சி யேகம்பனே"

"பொய்யடா பேசும் புவியில் மடமாதரைவிட்
டுய்யடா உய்யடா உய்"

(உடற்கூற்று வண்ணச் செய்யுள்.)

என்னும் செய்யுள்களினுல் அவரது எண்ணம் எத்தனை வெறுப் புடன் அமைந்துளது என்னலாம். அவர் சிறு வயதில் இல்லற வாழ்க்கையில் ஈடுபட்டவர். பின்னுல் ஒரு காரணத்தின் நிமித் தம் வெறுப்புற்று வெளிப்போந்தவர். ஆகவே மாதரிடை அடைந்த துயரங்களை அடிக்கடி நினைந்து நினைந்து வருந்து கின்றார்.

பின்னர் வந்த பல பெரும் புலவர்கள் இவ்வெண்ணத் தைக் கையாட வில்லை. வெகு காலத்திற்குப் பிறகு வந்த மற் றோர் பெரும் துறவியான அருணகிரிநாதர் இவ் வெண்ணத்

தைக் கைக்கொண்டு வெகு உருக்கத்துடன் பாடுகிறார். இவ் வெண்ணத்தைப் பற்றிப் பாடாத பாடல்கள் மிகக் குறைவென லாம். இதிலும் இவரது அனுபவமே மேம்பாடு உடையது எனலாம்.

" அருக்கு மங்கையர் மலரடி வருடியே
கருத்தறிந்துபின் அரைதனில் உடைதனை
அவிழ்த்து மங்குள அரசிலை தடவியு........."

" கலக வாள் விழி வேலோ சேலோ
மதுர வாய் மொழி தேனோ பாலோ
கரிய வார்குழல் காரோ கானோ......
..................................................எனமாதர்

இருகண் மாயையினில் மூழ்காதே
உனது காவிய நூலா ராய்வேன்
இடர் படாதருள் வாழ்வே நீயே — தரவேணும்

என்று கூறும் அடிகளில் மாதர் மயக்கிழிவை எத்தனை மட்டும் வற்புறுத்தி யிருக்கிறார்? இப்பெரியார் சிறு வயதில் மாதர் வலையில் அகப்பட்டு வருந்தினவர். அதனால் உடலும் மனமும் கெட்டு நொந்து கடவுள் அருளினால் மீண்டவர். ஆகவே தம் அநுபவத்தை முன்னிட்டு ஏனையவர் கெடாதபடி இவ்வெண் ணத்தை வெளியிட் டிருக்கின்றனர்.

இதே எண்ணத்தை ஒரு சிறிது கொண்டவர்கள் தாயு மான சுவாமிகள். இவரும் இல்லறத்தில் இருந்து துறவியான வர்கள். ஆனால் இல்லறத்தால் துன்பம் அடையாதவர்கள் ஆனதி னால் அவ்வெண்ணத்தை அதிகமாக வற்புறுத்தவில்லை. அவர் கூறியவை சில இவை:—

" வாளாரும் கண்ணியர் மோகம்—யம
வாதைக் கனலை வளர்க்கும் மெய் "

" துன்மார்க்க மாதர் மயக்கம்—மனத்
துயர்க்குப் பற்றாது சொன்னேன் "

" பதுமந்தனை இசைந்த............
பசுமஞ்சளின் வியந்த........." —வண்ணம்

பதினெண் சித்தர் என்று கூறும் தொகுதியார் பல இடங்

களில் பெண்கள் மாயத்தைக் கூறுகின்றனர். இது மாத்திரமே யன்றிப் பொது மக்கள் கொண்டிருக்கும் பல கொள்கைகளையும் இவர்கள் கண்டிக்கிறவர்கள். இவர்களைப் போன்ற புலவர்கள் மற்ற பாஷைகளிலும் உண்டு. தெலுங்கில் வேமன யோகிகள் இவ்வாறே பெண் மயக்கம் முதலியவைகளைக் கண்டிக் கின்றனர்.

இதுவரை நாம் ஆராய்ந்து வந்த வகையில் பெண்களிடத் துக்கொள்ளும் மயக்கமும் அதனால் ஏற்படும் இடையூறுகளும் வெகு காலமாக நம் புலவர் பெருமக்கள் கொண்டு புகட்டின எண்ண வளர்ச்சியினாலே ஏற்பட்டது என அறியலாம். பண் டைக் காலத்தில் இல்லாமல் இருந்து நடுக்காலத்தில் புலவர்கள் தம் வாழ்க்கையில் பெற்ற அநுபவத்தை முன்னிட்டு இவ் வெண்ணப் போக்கை இலக்கியத்தில் புகுத்திவிட்டார்கள். தற் காலத்தில் இவ்வெண்ணப் போக்கானது மக்களை ஈடுபடுத் தாது. மத்திய காலங்களில் நமது நாட்டில் வேசியர்கள் ஏற் பட்டு நன்மக்களைக் கெடுத்து வந்ததினால் இவ்வித எண்ணம் முதிர்ச்சி யடைந்தது. சமீப காலத்து "விறலி விடு தூது" முதலான நூல்களில் இது மிகுந்த முதிர்ச்சி பெற்றதையும் அதன் விபரீத பலன்களையும் நாம் கவனிக்கலாம். ஆண்களுக் கும் பெண்களுக்கும் எண்ணம் ஒருங்கே உரிமை யுடைத் தானது என்று இக்காலத்தில் நாம் கொண்டிருக்கிறபடியால், ஒருதலையான பெண் மயக்கம் என்பது அறவே ஒழிந்துவிடும். சமயத்திலும் கூட இதன் வலிமை குறைந்துவிடும் என்ன லாம்.

---

# போர்க் கருவிகள் போந்த புதுமை

கதிரி

[காழி. சிவ. கண்ணுசாமி B. A.]

அறிவியல் வளர்ச்சி இருந்தவாறென்னே! அணுக்கள் என்று கூறப்படும் அறிவியற் பகுப்பைப்பற்றி முற்ற முடிய அறிந்து விட்டதாக இருபது இருபத்தைந்து ஆண்டுகட்கு முன்பேயே அற்றை நாளிருந்த அறிஞர்களால் முடிவு கட்டப் பட்டு விட்டது. காணப்படும் ஒவ்வொரு பொருளும் சில பல அ.ணுக்களின் தொகுதியே யென்பதும், அணுவென்று பகுக் கப்பட்ட ஒன்றை மீண்டும் சிறு அளவினதாகப் பகுத்தலோ, பிரித்தலோ, அன்றித் திரித்தலோ இயலாதென்பதும், பல சில அணுக்களால் ஆக்கப்பட்டதாகக் கூறப்பட்ட ஒவ்வொரு பொருளும் தன் உருக் கெடுங்கால் அப்பொருளுட்சேர்ந்திருந்த அணுக்கள் ஒவ்வொன்றும் எத்தகைய கேடும் திரிபுமின்றிப் பிரிந்து முன்னைய உருவுடனேயே தனித்தனியாக இருந்து வரும் என்பதும் அவ்வறிஞர்கள் ஆய்ந்த முடிபுகளாம். அருக் கனே கிழக்கொழித்து மேற்கே தோன்றினும், அலைகடல் நிலை யழிந்து நீரற்றாலும், அணுக்கள் என்பன அழிவதோ உரு மாறுவதோ கிடையாது, முக்காலுங் கிடையாது, எக்காலத்தி லுங் கிடையாது என்னும் பொருள்பட டிண்டால் என்ற பேராசிரியர் கொக்கரித்தார்.

இப்பேராசிரியர் இவ்வாறு கொக்கரித்துத் திரிகையில் ஹேன்ரி பெஅக்கெரல் என்ற பாரீஸ் நகரப் பேராசிரியர் தீப் பாஷாணம் என்னும் எரிகந்தகத் தொடர்புடைய பல பொருள் களை, அதாவது, இருட்டிற் சுடர்விட்டு மிளிரும் ஆற்றல் படைத்த பல பொருள்களை, ஆராய்ந்து கொண்டிருந்தார். இவ் வாராய்ச்சியில் புகைப்படம் பற்றுந் தகடுகளை இவர் பயன் படுத்த நேர்ந்தது. அவ்வாறு பயன்படுத்தி யாராய்ந்த பொழுது அவற்றின்மீது, ஒரு சிறிதும் எதிர்பாராதனவும் எக்காரணங் கொண்டு இருத்தல் முடியாதெனக் கருதப்பட்டனவுமான சில

குறிகள் காணப்பட்டன. அத்தகடுகளைப் பயன்படுத்திய பொழுது ஒருகால் சிறிது கருத்தழிவாயிருந்ததால் அக்குறிகள் ஏற்படுமாறுயிற்ரே என ஐயுற்று மறுமுறை மிகவுங் கருத்தாக அவ் ஆராய்ச்சியை நடத்தினர். எனினும் இம்முறையும் அவ்விந்தையான குறிகள் காணப்பட்டன.

அக்குறிகள் யாவை? எக்காலத்திலும் எக்காரணத்தினலும் அழிவுறல் முடியாதென்று கருதப்பட்ட அணுக்கள் சில தாமாகவே வேண்டுமென்றே உடைந்து தூளானமையால் ஏற்பட்டவைகளே அவைகள். ஆராய்ச்சியில் அவர் பயன்படுத்திய "யூரேனியம்" என்ற ஒரு கனிப்பொருளோடு சேர்ந்திருந்த "ரேடியம்" என்னும் கதிரி என்ற பொருளினுல் அக்குறிகள் ஏற்பட்டன வென்று அவர் கண்டு பிடித்தார். கதிரி விடும் ஒளிச்சத்தே அந்தத் தகடுகளின் மேல் சில குறிகளைச் செய்திருந்தது. இக்கதிரி கனிகளிலிருந்து வெட்டி யெடுக்கப்படும் பொருள்களில் மிகவுஞ் சிறந்த தொன்ருகக் கருதப்பட்டு வருகிறது.

புகைப்படம் பற்றுந் தகடுகள் (negatives) ஒரு சிறிது வெளிச்சம் பட்டாலும் கெட்டு விடுகின்றன என்பது யாவருமறிந்தது. ஆகவே கதிரியிலிருந்து கட்பார்வைக்குப் புலனுகாது வெளிப்படும் ஒளிக்கதிர்கள் உளவென்பது அவ்வொளிக்கதிர்கள் பட்டு புகைப்படம் பற்றுந் தகடுகள் கேடுற்றமையால் தெளியப்பட்டது. இக்கதிரி காற்றுடன் கலந்து மின்சாரஞ் செலுத்தியாகப் பயன்படக்கூடிய தென்றும், தகடுபோன்றதொரு பொருளின்மீது தடவப்பட்ட சில கலவைப் பொருள்களை ஒளிவிட்டு மிளிரச் செய்யும் ஆற்றல் வாய்ந்ததென்றும் பின்னர் கண்டு பிடிக்கப்பட்டது.

இனி, இவ்வாறு வேறு தொடர்பின்றித் தானே ஒளிவிடும் ஆற்றலையே இக்காலை "ரேடியோ ஆக்டிவிட்டி" கதிரி இயக்கம் என்று கூறுவது. கதிரியைப்போற் கதிர்விடும் ஆற்றல் வாய்ந்த மற்ருெரு பொருளும் பின்னர் ஆராய்ந்து கண்டு பிடிக்கப்பட்டுள்ளது. அது "தோரியம்" எனப் பெயர்படும்.

இனி, கதிரி வீசுங் கதிர்கள் யாவையென்று பார்க்கலாம். அக்கதிர்கள் மூன்று வகையினவாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. ஆல்பாகதிர் என்ற முதல்வகை ஒரு தாளினல் மறைபடக் கூடியது. அதாவது, அக்கதிரின் முன் ஒரு தாளைப் பிடித்தால் அக்கதிர் அத்தாளினூடு செல்ல முடியாதாகையால் தாளின் பிற்புறத்திற் கதிரொளி தெரியாது. மேலும் இக்கதிர் திரண்ட அணுக்களின் தொகுதி யென்றும், அவ்வணுத் தொகுதிகளிலிருந்து "ஹீலியம்" என்ற வாயுவைப் பெற முடிவதால் அவ்வணுக்கள் ஹீலியம் அணுக்களேயென்றும் முடிவு கட்டப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு அணுவும் திரண்டு பருமையாக இருப்பதனுலேயே தாளை ஊடறுத்துச் செல்ல இயலாமல் தடைபட்டு நிற்கின்றது.

இரண்டாவதான பீட்டா கதிர் என்பது ஒரு கனத்த தகட்டினூடும் புகுந்து சென்று ஒளிவீச வல்லதாகும். இக்கதிரின் அணு ஒவ்வொன்றும் அணு என்று அறிவியலில் கணிக்கப்படும் ஒன்றில் இரண்டாயிரத்திலொரு பங்கு பருமனுடையதாகத்தா னிருக்கிறது. எனவே ஒரு தகட்டினூடும் எளிதிற் புகுந்து சென்று ஒளி வீசவல்லதாயிருக்கிறது. "எக்ஸ்ரே" என்ற நுண்ணுழை கதிரிலுள்ள மின்சார அணுக்களுக்கும் இவ்வணுக்களுக்கும் எவ்வித வேறுபாடுமில்லையென்று கருதப்படுகிறது.

காற்றுமற்ற வெறுங் குழாயொன்றிற் செலுத்தப்பட்ட மின்சார அணுக்களைச் சட்டென இயக்குவித்தாலும், இயக்க நிலையிலிருந்து தடுத்தாலும், "எக்ஸ்ரே" என்ற நுண்ணுழை கதிர் உண்டாகின்றது. அஃதேபோல் மேற்குறித்த "பீட்டா கதிர்களின்" அணுக்களிற் சிலவற்றைச் சட்டென இயக்கினுலும், வெடித்து விரைவாக வெளிப்படச் செய்தாலும் காமா என்ற மூன்றாவது வகைக் கதிர் உண்டாகிறது.

முத்திறப்பட்ட இக்கதிர்களின் முதன்மையான பயன் காற்றுடன் கலந்து அதை மின்சாரஞ் செலுத்தியாகச் செய்வது தானென்று முன் கூறப்பட்டது. (Radio activity) கதிரி

இயக்கத்தினால் கதிரி அணு ஒவ்வொன்றும் ஒரு நொடிக்கு 50,000 மைல்கள் விழுக்காடு செல்லக்கூடிய வேகத்துடன் ஹீலியம் அணுக்களை வெளியாக்குகின்றன. எனவே கதிரியணு ஒன்றை ஒரு குழாய் போன்ற மூடப்பட்ட பொருளினுள் அடைத்து வைத்தால் அதிலிருந்து புறப்படும் ஆல்பா கதிர்கள் (ஹீலியம்) அப்பொருளின் புறங்களை இடைவிடாமல், நாடோறும், திங்கடோறும், ஆண்டாண்டு தோறும் தாக்கிக்கொண்டேயிருக்கும். இவ்வாறு தாக்கிக்கொண்டிருப்பதால், இரும்பைச் சம்மட்டியினால் அடிப்பதனால் எவ்வாறு இரும்பு சூடேறுகிறதோ அவ்வாறே இந்த அணுக்களின் ஓயாத் தாக்கலால் அக்குழாய் போன்ற பொருளுஞ் சூடேறுகிறது. அன்றியும் அப்பொருளைச் சூழ்ந்துள்ள பொருள்களும் ஒரு சிறிது சூடேறுகின்றன.

குறிப்பிட்ட சில மருந்துகளை ஒரு தகடுபோன்ற பொருளின்மீது தடவி அதன்மீது கதிரியணுக்கள் தாக்குமாறு செய்தால் ஒவ்வொரு அணுவானது தாக்குகின்ற இடத்திலும் ஒரு சிறு ஒளி உண்டாவதைக் காணலாம். ஆனால் அவ்வாறு காண்பது பூதக்கண்ணாடியினாலேயே யன்றி நம் இயற்கைக் கண்களால் முடியாது. கண் பார்வைக்கு இடைவிடாமல் நின்றெரியும் அழகான ஒரு ஒளி வீசுவதாகவே புலப்படும்.

இனி, இவ்வாறு ஒரு தகட்டின்மீது செலுத்தாமல் "சல்பைட் ஆப் சின்க்" என்ற பொருளோடு கலந்து விட்டால் அப்பொருளின் ஒவ்வொரு அணுவும் கதிரியணுவிற்கு ஒரு தகட்டைப்போல் பயன்படுவதால், ஒளி விட்டெரியும் பசை போன்ற கலவைப்பொருள் உண்டாகிறது. இதுவே இருளினும் ஒளி விசிச் சுற்றுப் பொருள்களை வேண்டிய வளவுக்குப் புலப்படுத்துவதாகும். இதுவேதான் கடிகாரம் முதலிய இருளிற் பயன்படும் கருவிகளின் முகங்களிற் றடவப்பட்டு வருவதாகும்.

இனி, அண்மையில் நடைபெற்ற ஐரோப்பியப் பெரும் போரில் 'செப்ளின்' என்ற ஜெர்மானிய ஆகாய அரக்க விமானங்கள் பறந்து சென்று கீழுள்ள நாடுநகரங்களில் வசித்து

வந்த ஒரு பாவமுமறியாத ஏழை மக்கள்மீது வெடிகுண்டுகளை யெறிந்து இடர்விளைத்து வந்ததைப் பற்றி யறிந்திருக்கலாம். இவ்விமானங்கள் ஜெர்மன் மன்னரான கெய்ஸர் உவில்ஹெல்ம் என்பவராலும் அவரது படைகளாலும் அழிவற்றன என்று கருதப்பட்டுப் பெருமையாகப் பாராட்டப்பெற்றவை. இத்தகைய விமானங்கள் ஒவ்வொன்றையும் நள்ளிரவில் ஒரு சிறு ஆங்கில ஆகாய விமானம் பின்தொடர்ந்து சென்று அழித்துக் கீழ் வீழ்த்தியதும் யாவரும் அறிந்ததொன்றே. அழிவற்றதாகக் கருதப்பட்ட அரக்க விமானங்கள் ஒரு சிறு ஆகாயவிமானத்தால் இருளில் அழிவுறுவதற்கு உதவி செய்தது யாது? கதிரியிலிருந்து வெளிப்படும் ஆல்பா கதிர்களே யென்றால் அது வியப்பன்றோ? பின்சென்ற சிறு விமானத்தின் ஓட்டுங் கருவிகளிலும் போர்க்கருவிகளிலும் கதிரிப்பசை தடவப்பட்டிருந்தமையால் எளிதில் அக்கருவிகள் பெரிய விமானத்தை இருளில் தொடர்ந்து தாக்கி யழிப்பதற்கு ஏற்றவையாயின. இவ் ஆல்பா கதிர்கள் அச்சிறு விமானத்திலுள்ளவர்களுக்கு மட்டுமே வேண்டுமளவிற்கு ஒளியை ஈந்து வந்தனவேயன்றி அதிகமான ஒளியை அளித்துத்தொடரப்படும் செப்பினிலுள்ளோர்க்குக் காட்டிக் கொடுக்கக்கூடாதனவாயிருந்தது கூர்ந்து நோக்கிக் கருதத்தக்கதொன்றாகும். இக்கதிரி யணுக்களேயன்றி ஏனைய ஒளிவிடுங் கருவிகளாயின் செப்பினிலுள்ளோரால் எளிதிற் கண்டுபிடிக்கப்பட்டுச் சிறு விமானம் அழிவுறற்கேதுவாயிருந்திருக்கும் என்பது திண்ணம். கதிரி பெரும்போரிற் புரிந்த பேருதவி இதுவேயாம்.

மற்றொரு வகையிலும் கதிரி உதவிபுரிந்துளது. போரிலிருந்து எண்ணற்ற வீரர்கள் முடக்கு வாயுவினால் தாக்குற்றுத் திறனழிந்து மீண்டனர். இம் முடக்குவாயு வென்பது நீர்ப் பண்புடையதாகிய ஒரு பொருள் உடலிலுள்ள செந்நீரிற் கலப்புற்றுக் கணுக்கள் தோறும் சென்று தங்கிக் கரடு தட்டி விடுவதுதான் என்று நம்பப்படுகிறது. இத்தகைய கரடு தட்டின இடங்களின்மேற் கதிரியின் கதிர்களை ஏற்றவாறு செலுத்தி வருவதால் அவைகள் கரைந்து எளிதில் தீர்ந்தொழிகின்றன

என்பது மருத்துவ நூலோர் கருத்தாகும். "பாத்" "பக்ஸ்டன்" முதலிய இடங்களிலுள்ள நீரூற்றுக்களில் நீராடுவதால் பல நோய்கள் தீருவதாகக் கேள்விப்படுகிறோம். அந்நீரில் ஓரளவிற்குக் கதிரியியக்கம் இருப்பதினாலேயே அதற்கு நோய் தீர்க்கும் பண்பு அமைந்திருத்தல் வேண்டும். இன்னும் பிளவை முதலிய கட்டிகள் தீர்வதற்கும் கதிரி பயன்படும் என்றும் நம்பப்படுகிறது.

எதிர்பாராத வகையில் இவ்வாறு கனிப்பொருளாய கதிரியென்பது பகையழிக்குங் கருவியாகவும் நோய்தீர்க்கும் கருவியாகவும் அமைந்தது ஒரு புதுமை யன்றோ?

---

# மங்கை பங்கன்

[மகிழ்நன் எழுதியது]

## உ. உலகமும் கடவுளும்

நீரும் நெருப்பும் ஒன்றுகூடி நின்றவாறு பார்வதியும் பரமனுஞ் சேர்ந்து இலங்கும் மங்கைபங்கன் உருவம் எவ்வாறு தோன்றியதென்பதைப் புராணம் பின்வருமாறு பகர்கின்றது :-

கிட்டுதற்கரிய கைலாயத்தினுச்சியில், உளத்தை மகிழ்விக்கும் எழில் நிறைந்த காட்சிகளிடையே, உமையும் அரனுங் காதலியும் காதலனுமாய் உடல் நெருங்க வீற்றிருக்கையில், முப்புரமெரித்த விரிசடைக் கடவுளைத் தொழுது செல்லவந்த பிருங்கு (பிருகு) முனிவன் அங்குத் தோன்றினன். அழற்கணனுங் கயற்கணியும் பிரியாவகையிற் பொருந்தி யிருப்பதைக் கண்ட அம்முனி, வருந்தி யாயினுஞ் சிவனை மாத்திரம் வணங்கவேண்டுமென்றுன்னி, ஒரு வண்டின் வடிவெடுத்து அவர்கள் அமர்ந்திருந்த இருக்கையைத் துளைத்து வெளிப்பட்டுக் கருதியவாறே பிறைசூடியை மட்டும் வழிபட்டுச் சென்றான். இது கண்டு மலைவுற்ற மலைமகள் "பிருங்கு முனிவன் உன்னை மாத்திரம் வலம் வந்து விலகியதன் காரணமென்ன?" என்று தன் கொழுநனை

வினவ, அவன் இம்மை மறுமை இன்பங்களை விழைந்தவர் உன்னையும், வீட்டின்பத்தை விழைந்தவர் என்னையும் தொழுகின்றனர்; மறுமையிற் கருத்தூன்றிய பிருங்கு என்னை மாத்திரம் வழிபட்டேகினான்," என்று விடை பகர்ந்தான். இச்சொல்லைச் செவியேற்ற பைங்கொடி சிறிது வருந்தித் தன் கணவனை நோக்கி, "உனக்குளதில் எனக்கும் பங்கில்லையோ?" எனக் குழைந்து கேட்க, அன்பர்க்கெளியனான பிரான் அவள் கருத்திற்கிசைந்து, தன் உடலின் இடது பகுதியை அவளுக்கீந்து, பெண்ணும் ஆணுங்கூடிய மங்கைபங்கனானான்.

இங்ஙனம் இடபாற் பெண்ணாகவும் வலபால் ஆணாகவும் பெண்ணுரு நீல நிறத்தினதாகவும், ஆணுருச் செம்மை நிறத்தினதாகவும் மங்கைபங்கன் வடிவந்தோன்றும்.

" பைங்குவளைக் கார்மலராற் செங்கமலப் பைம்போதால்
அங்கங் குருகினத்தாற் பின்னும் அரவத்தால்
தங்கண் மலங்கழுவு வார்வந்து சார்தலினால்
எங்கள் பிராட்டியும் எங்கோனும் போன்றிசைந்த
பொங்கும் மடுவிற் புகப்பாய்ந்து பாய்ந்துநம்
சங்கம் சிலம்பச் சிலம்பு கலந்தார்ப்பக்
கொங்கைகள் பொங்கக் குடையும் புனல்பொங்கப்
பங்கயப்பூம் புனல்பாய்ந் தாடேலோர் எம்பாவாய்.
(திருவெம்பாவை—13)

இப்பாடலின் முதற்பகுதியில் பைங்குவளையும் செங்கமலமும் நிறைந்த மடுவைப் பிராட்டியும் பிரானும் இசைந்திருத்தலுக் கொப்பிட்டிருக்கிறது. நீலக்குவளையால் பிராட்டியும், சிவந்த தாமரையால் பிரானுங் குறிக்கப்படுவது விளம்பாதே விளங்கும். மங்கைபங்கன் உருவத்திற்குக் காரணங்கூறும் புராணவரலாற்றைப்பற்றிச் சில மொழிந்து மேற்செல்வாம்.

ஒரு காலத்தில் பார்வதியுஞ் சிவனும் இருவேறு உருவினராய், மனைவியுங் கணவனுமாக விருந்தபின், சிவனை மாத்திரந் தொழவெண்ணி ஒருநாள் வந்த பிருங்கு முனிவன் செய்த வழிபாட்டின் பயனாக இருவரும் ஒருவராயினர், என்பது ஓர் அரிய உண்மையைத் தன்னுளடக்கி வைத்திருக்குங் கதை

யாகும். இதை அகக்கண் கண்ட உண்மையொன்றை விளக்க வந்த குறியாக நாம் கொளல் வேண்டும். உடலை யொடுக்கிக் கைகட்டித் தொழுவது ஒரு குறி. இதனாற் குறிக்கப்படுவ தென்னவெனின், உரை கடந்த இறைவனது பெருமையை உளம் உணர்ந்து செயலொடுங்கிக் கிடப்பதாம். உளம் ஓடுங் காதிருக்கையில் உடலை வளைப்பது வெறுந் தேகப்பயிற்சியாய் முடியும். அகங்குவியாவிடின், கைகுவிந்தென்ன பயன்? நெஞ்சு தாழாவிடின் தலை தாழ்ந்தென்ன பயன்? குறி முகத்துக் கண்ணுக்குத் தோன்றுவது, குறிப்பு அகத்துக் கண்ணுக்கு வெளிப்படுவது. குறிப்பை விடுத்துக் குறியைப் பாராட்டித் திரிதல் கரும்பிருக்க இரும்பு கடிப்பதை யொக்கும்.

புராணங் கூறுவனவற்றிற் பதிந்து கிடக்கும் உண்மைகள் எளிதிற் புலப்படாவென்பதற்குச் சான்றுண்டு. திரிபுர மெரிக்கச்சென்ற காலை, வையகத்தைத் தேர்த்தட்டாகவும், வெங்கதிர் ஞாயிற்றையுந் தண்கதிர் மதியையுந் தேர் உருளைகளாகவும், நால்வேதங்களைப் பரிகளாகவும், இந்திரன் முதலிய பற்பல தேவர்களைப் பிற தேர் உறுப்புக்களாகவும், மேரு மலையை வில்லாகவும், வாசுகி எனும் பாம்பை வில்லிற்பூட்டிய நாணாகவுங் கொண்டு தோடுடைய செவியன் புறப்பட்டானென்று புராணம் இயம்புகின்றது. எரிந்தொழிந்த திரிபுரங்கள் கரும்பொன், வெண்பொன், செம்பொன்னாலாக்கப் பெற்றனவென்றும், இறுதியிலவற்றை முக்கணன் நகைத்தெரித்தா னென்றும் மொழிப. நகைத்தெரிப்பதற்கு இத்துணைப் போர் முழக்கம் வேண்டுவதென்னையெனின், முப்புரங்களை நோக்கி முக்கணன் தேர் ஊர்ந்து செல்லுங்கால், தேர் உறுப்புக்களாக வமர்ந்த தேவர்கள், "நமது துணையின்றிச் சிவன் முப்புரமழிக்க லாற்றான்" என்று தமக்குட் செருக்குற்றமை கண்டு வெகுண்டு அவர்கள் உதவியை நீக்கி, நெற்றிக்கண் திறந்து, விடமுண்ட கண்டன் திரிபுரங்களை நீறாக்கினன் என்ப. இப்புராண வரலாற்றை அடிப்படையாகக் கொண்டே திருவிழாக்களிற் சிவ உருவத்தைத் தேரிலேற்றி ஊர்வலம் வருதல் நடைபெறுகின்றது. இஃதின்னனமாக, முப்புரங்கள் எரிந்து நீறாயினமை பற்றி,

அப்பணி செஞ்சடை யாதி புராதனன்
முப்புரஞ் செற்றன னென்பர்கண் மூடர்கள்
முப்புர மாவது மும்மல காரியம்
அப்புரஞ் செற்றமை யாவ ரறிவரே !

(திருமந்திரம்)

என்று திருமூலர் சாற்றுகின்றார். முப்புரமாவது மும்மலங்களாம் என்று ஈண்டுத் தெளிவாய்த் திருமூலர் கூறுகின்றார். மும்மலங்களாவன: ஆணவம், மாயை, காமியம். இவற்றுள் முதலாவதாகிய ஆணவம் மற்றை இரண்டைக் காட்டினும் உரமுடையதென்பதைக் காட்ட அதை இரும்பிற்கொப்பிடுவது இயல்பு. ஆணவம் இரும்பாயின் மற்றவை இரண்டும் முறையே வெள்ளியும் பொன்னுமாகும். இதுபற்றி முப்புரங்கள் இரும்பு வெள்ளி பொன்னா லமைந்தனவென்று மொழியப்பட்டது. உயிர்களைப் பற்றி நிற்கும் மும்மலங்களைச் சிவன் நீக்குதலாகிய செய்தியை முப்புரமழித்தமையாகப் புகல்கின்றனர். ஆதலின் அஃதோர் உவமையே என்பதற்கு வேறு ஆராய்ச்சி வேண்டுவதின்று. உயிர்களின் பொருட்டுச் சிவன் இயற்றுகின்ற மும்மலம் அழித்தலாகிய தொழில் பண்டொருநாள் நிகழ்ந்து, அஃதுடன் நின்றுவிட்டது என்று சொல்வது அறிவோடு பொருந்துமுறையன்று. இறைவனும் உயிர்களும் அன்றிருந்தவாறே இன்றுமுளர். ஆதலின் மும்மலம் கவ்வுதலும் கழிதலும் முன்போலவே இன்றும் நிகழவேண்டும். இஃதுண்மையாயின் முப்புரமெரித்த செய்தி மிகப் புராதன காலத்தில் நிகழ்ந்ததென்பது எங்ஙனம் பொருந்தும் ? உமையும் அரனும் முன்னொரு நாளில் ஒன்றாயினர் என்பதையும் இவ்வகையில் நாம் உற்று நோக்கவேண்டும். என்றுமுள்ள ஒருண்மை உருப்பெற்றதே மங்கைபங்கன் வடிவமென்க.

உலகு எங்ஙனமுண்டாயிற்று ? அதை ஆக்கியது ஒன்றுண்டோ ? உளதாயின், அது எத்தன்மையது ? என்ற கேள்விகள், எல்லாவற்றையு மறியவேண்டுமென்ற ஆவலுடைய மக்கள் உளத்தில் தோன்றாதிருப்பதில்லை. இவற்றிற்கு விடைபெற முயன்ற முன்னோர்கள் வெவ்வேறு முடிவிற்கு வந்திருக்கின்ற

ளர். இவற்றை ஆராய்ந்து முடிபு காட்டுவது நமது நோக்கமு மன்று, நம்மால் இயல்வது மன்று. மேற்சொல்லிய கேள்வி களுக்கு விடைதேட முயல்வோர் கவனத்தில் வைக்கவேண்டிய தொன்றுண்டு. உலக அறிவுகொண்டு நாம் காணக்கூடும் உண் மைகளெல்லாம் புலன்களுக்கெட்டியவற்றை ஆராய்தலால் தோன்றுகின்றவை. உலகைத் தோற்றுவித்த ஓர் ஆற்றலைக் குறித்து ஆராய்ச்சியிற் புகுங்கால் நாம் விண், மண் கடந்த ஒன் றைப்பற்றி நினைக்கவேண்டியதாகிறது. வெறும் அறிவுகொண்டு இதை அளத்தல் இயலாது. அளவில்லாததை அளத்தல் கூடுமோ? அறிவின் எல்லைகட் கப்புறத்ததாகிய ஒன்றைக் குறித்து ஆராய்ச்சி செய்வது மலட்டுப்பசுவைக் கறக்கமுயல் வதோடொக்குமென்பாருமுளர். இவர்களோடு முரண்பட்டு உரையுமறிவுங் கடந்த ஒண்பொருள் ஒன்றுண்டென்றும் அஃது அன்பால் அகங்குழைந்தவர் நுகரக்கூடியதென்றும் நம்புகின்ற ஒரு குழாத்தினருளர். இக்குழுவினர் அவ்வொண்பொருளை எம்முறையின் கண்டனர் என்பது பெண்ணும் ஆணும் ஒன்றிய உருவத்தால் வெளியிடப்படுகிறது.

நாற்படையொடு மன்னர் தங்க நிழல் கொடுக்கும் ஆலமரம் நுண்ணிய மீன் சினையை யொத்த விதையிலிருந்து முளைக்கின் றது. நூற்றுக் கணக்கான ஆலவிதைகளைப் பறவைகள் பழத் தொடு உண்டு உயர்ந்த பாறைகளில் அவற்றைச் செலுத்துகின் றன. நுண்ணிய ஆல விதையை உடைத்துப் பார்க்கில் ஆல மரத்தின் பகுதியொன்றும் அதனுள் தோன்றாது. விதையுள் ஒன்றுமில்லை என்று சொல்வதும் ஒக்கும். இதுபோல் உலகத் தோற்றத்தை நோக்கின் இறுதியில் அது ஒன்றுமில்லாமையில் முடியும். ஆயினும் ஆலமரத்தைத் தோற்றுவிக்கும் ஆற்றல் சிறிய ஆலவிதையில் மறைந்து கிடப்பதையொப்ப உலகுக்கு நிலைக்களனுய ஓர் ஆற்றல் புலன்களுக்கெட்டாது ஒடுங்கியும் விரிந்துங் கிடக்கின்றதென்பர். காலம், இடம் எனுமிரண்டை யுங்கடந்த இவ்வாற்றலைக் கடவுள் என்ற ஓர் அரிய சொல்லாற் பண்டைத் தமிழர் குறித்தனர். பேர், ஊர் இல்லாப் பெரியா னுக்குக் கடவுள் என்ற பெயர் நன்கு பொருந்தும். காலமும்

இடமுங் கடந்த ஒரு பொருள் உருவம் பெறுவதன்று. ஆயி னும், அது மக்களுடன் தொடர்புடையதானமையின் மக்களது கருத்தில் உருப்பெறுவது இயல்பு. பொதுவகையிற் கடவுள் வாழ்த்து மொழிந்த வள்ளுவனார், செம்பொருளை ஆண்பாற் படுத்தியே பேசினார். இருதிணை ஐம்பாலுட் கடவுளை அடக்க லாகாதென்பதை யுணர்ந்த வாதவூரடிகள்,

" உண்டொர் ஒண்பொருள் என்றுணர்வார்க் கெலாம்
பெண்டி ராணலி யென்றறி யொண்கிலை "

(திருவாசகம்)

என்றனர். எல்லாவற்றையுங் கடந்து நின்ற பொருள் ஆணென் றும், பெண்ணென்றும், அலியென்றும் பகுக்கப்படாது. அந் நிலை மங்கைபங்கன் வடிவத்தில் வெளிப்படுவது காண்க.

இனி, இங்ஙனம் யாவற்றையுங் கடந்து நின்ற செம்பொரு ளிலிருந்து தோற்றம், வளர்ச்சி, அழிவுக்குரிய உலகப்பொருள் எவ்வாறு பிறந்தன என்று பார்க்கவேண்டியதாகின்றது. அழி விலாததும், முற்றறிவுடையதும், மலச்சார்பில்லாததுமாகிய தனி முதலினின்றும், அடிக்கடி மாறுந்தன்மையனவும் மலச் சார்புடையனவுமாகிய வையகப் பொருள்கள் தோன்றுமா றென்னை? "உலகம் என்பது ஒன்றில்லை; பழுதிற் பாம்புபோல வும், இப்பியில் வெள்ளிபோலவும் மயக்க அறிவால் உலக மென்று ஒன்று இருப்பதாக நாம் நினைக்கின்றோம். அங்ஙனம் ஒன்றில்லை" என்பர் ஒரு சாரார். வெவ்வேறு நிலைகளையுடைய உயிர்களுக்கு அவ்வவற்றின் தன்மைக்கேற்ற நுகர்ச்சிகளை யளித்து அவற்றைத் தன்பால் ஈர்க்கும் பொருட்டுத் தன் அருள் ஆற்றலால் இறைவன் பல்வகை யுலகுகளைத் தோற்று விக்கின்றான் என்பர் மற்றொரு சாரார். இக்கருத்துடை யோரே இறைவனை மங்கைபங்கனாகக் கொண்டவர். உலகப் படைப்புக்குத் துணைக்காரணமாயிருக்கும் இறைவனது அருள் ஆற்றலையே இவர்கள் சக்தியென்றும், உமையென்றும், அம் மையென்றும் பல பெயர்களாற் குறித்தனர். இறைவனுக்கும் இவ்வாற்றலுக்குமுள்ள பேசரிய தொடர்பு 'பெண்ணாகிய

பெருமான்' உருவத்தால் அறிவிக்கப் படுகின்றது. இக்கருத்தை ஆழ்ந்து நோக்கிய திருமூலர்,

"வாயு மனமுங் கடந்த மனோன்மணி
பேயுங் கணமும் பெரிதுடைப் பெண்பிள்ளை
யாயு மறிவுங் கடந்த வரனுக்குத்
தாயு மகளுநற் றாரமு மாமே" (திருமந்திரம்)

என்று நவின்றனர்.

இம்மைப் பயன்கள் பெறுதற்கு அம்மை வணக்கஞ் சிறந்ததென்ற ஒரு கொள்கையுண்டு. இக்கொள்கை, "இம்மை நலத்தை விரும்பியவர் உன்னைத் தொழுகின்றனர்" என்று சிவபிரான் பார்வதிக்கு விளம்பினானென்று கூறும் புராண வரலாற்றினும் வெளிப்படுகின்றது. இஃது எங்ஙனம் எழுந்ததென்பதை மேற்சொன்னவற்றா லறிக.

"ஆதி பகவன் முதற்றே யுலகு" என்பது திருக்குறள். "ஆதி பகவன்" என்பதில் "ஆதி" உமையவளைக் குறிக்கும் என்பாருளர். அங்ஙனமாயின், அது 'மங்கை பங்கன்' என்ற கருத்தில் வழங்கப்பட்டதாகும். "உலகந் தோன்றியதன் காரணம் பலவாறாகப் பலராற் பகரப்படினும், அஃது இறைவனை முதலாக வுடையது என்பது தெளிக" என்று கூறுவார்போல் திருவள்ளுவர் தமது நூலைத் தொடங்குகின்றார். பௌத்தருஞ் சமணரும் "ஆதி பகவன் முதற்றே யுலகு" என்பதைத் தழுவார். அவர்களுடைய கருத்து வேறு.

"ஆதி பகவன் முதற்றே யுலகு" என்று சொல்லி முடிந்தவுடன்,

"கற்றத னாலாயபயன் என்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅ ரெனின்"

என்று வள்ளுவர் மொழிதலால், உலகுக்கு முதலாய பொருளைக் கல்வி வகையான் ஆராயப் புகுவார் சிலர் இன்மை (நாஸ்திகம்) எனும் இன்னாநிலை எய்துவதை அவர் உளத்திற் கொண்டிருக்க வேண்டுமென்று நினைக்க இடமுண்டாகின்றது. இறைவனுண்மை கற்றவறிவு கொண்டு துணியப்படாது. யாவற்றிற்

கும் முதலு முற்றுமாகித் தொடக்க விறுதியற்றதை அறிவு கொண்டு முற்றுகை செய்ய முயல்வதனாலேயே இன்மை (நாஸ்திகம்) விளைகின்றது. இறைவன் பற்றப்படுவான் (God Can be apprehended). அவனை முற்று மறிதல் கூடாது (He cannot be comprehended). இதற் கிசையவே தாயுமானார்,

"கற்ற வறிவாலுனைக் கண்டவன்போற் கூத்தாடிற்
குற்ற மென்னெஞ்சே கொதிக்கும் பராபரமே"

(பராபரக்கண்ணி)

என்றனர். மணிவாசகரும்,

"பூதங்கள் தோறும் நின்றாய் எனின் அல்லால்
போக்கிலன் வரவிலன் என நினைப்புலவோர்
கீதங்கள் பாடுதல் ஆடுதல் அல்லால்
கேட்டறி யோம்உனைக் கண்டறி வாரை"

(திருப்பள்ளி எழுச்சி)

என்று இனிது புகன்றனர்.

பௌத்த சமயத்தலைவர், அறிவின் எல்லை கடந்து சென்று முதற் பொருளின் உண்மைகூற உடன்படாராயினர். அவரது நிலை கடிந்து கொள்ளத் தக்கதன்று. அவர் மொழிந்தவற்றிற்குப் பொருள் கூறிய பின்னோர், அவரது உடன்படா நிலையைத் தமக்கேற்றவாறு திரித்தனர். இற்றை நாள், உலகைப் புதுப்பிக்க முனைந்து நிற்கும் பலர் இன்மையில் அழுந்தி யிருப்பது இரங்கத்தக்கது. கடவுளுண்மை அறிவி லமையாது; கடவுளின்மை அறிவிற்கமைதி 'யளியாது. ஆதலின், மன்பதையின் நன்னிலை கருதி யுழைப்போர் கடவுளுண்மையைத் தாக்குவதாற் பெரும் பயன் பெறார்.

கடவுளின்மை பேசுதல் புதிதன்றே! நமது நாட்டில் ஈராயிர மாண்டுகட்கு முன் நாஸ்திக மிருந்தது. இதைப் பின் பற்றியவர் சார்வகர் என்றழைக்கப்பட்டனர். உலோகாயதர் என்றும் இவர்களுக்குப் பெயருண்டு. மணிமேகலையில் உலோகாயதன் மதம் இன்னதென்று கூறப்பட்டுளது. ஆதலின் திருவள்ளுவர் முதலானோர் கடவுளின்மையாகிய கொள்கையை

அறியாதவரல்லர்; அறிந்தும், கடவுளுண்மையைக் கைக்கொண்டார்.

கடவுளுண்மையைக் கைக்கொண் டொழுகுவோர், இறைவன் எல்லா உயிர்கள்மேலும் பேரிரக்கமுடைய னுதலை எண்ணி, மக்கட் பிறவியின் முன்னேற்றத்திற்கு மனமுவந்து உதவி புரிதல் வேண்டும். இறைவன்பால் அன்பு செலுத்துகின்றவர்கள் மக்களிடம் அன்பிலாதிருத்தல் கூடுமோ? எல்லா உயிர்களும் இன்பத்தை நாடிச் செல்கின்றன. ஒவ்வோர் உயிரும் இம்மையில் தனக்குக் கிடைக்கக்கூடிய இன்பங்கள் யாவற்றையும் பெற ஆவலுடையதா யிருக்கின்றது. பொது நன்மைக்குக் கேடு வராமையாகிய வரம்புக்குட்பட்ட எல்லா வின்பங்களையும் எல்லா உயிர்களுக்கு மளிக்க முயல்வது இறைவனைத் தொழுவோர் கடமையாகும். இதை மறந்து, செம்மை யல்லாதவற்றையும் பழமை பற்றியோ பெருமை பற்றியோ அடியவர் அரண் செய்யப் புகுவாராயின் கடவுள் நெறிக்கது கடைசியிற் பேசொணுப் பெருந் தீங்காய் முடியும்.

கடவுள், உலகு என்று நாம் பேசும்பொழுது பெரும்பாலும் நமது தாய்நாடாகிய இந்தியாவின் எல்லை கடந்து அப்பாற் செல்ல வியலாதவர்களா யிருக்கின்றோம். இது நம்மிடத்துள்ள மிக நாணத் தகுந்த குறைகளுள் ஒன்றாகும். எல்லாவுலகையும் ஆண்டு நடத்துகிறவனென்று நாம் சொல்லுங் கடவுள், இமயம், குமரி என்ற வடதென் வரம்புகளுள்ளும், மேற்கடல், கீழ்க்கடல் என்ற மற்றவிரண்டு எல்லைகளுள்ளும், அடைபடுவானே? இந்தியாவிலுள்ள உயிர்கள்மேல் மட்டுங் கடவுளுக்குக் கருணை யுண்டென்று சொல்ல எவர் முன் வருவார்? அல்லது, ஐரோப்பிய, அமெரிக்க மக்களுக்கு நேர்வதுபற்றி இறைவனுக்குக் கவலை கிடையாது, நமது நன்மைக் கென்றே அவன் நடனமிடுகின்றான் என்று துணிந்துகூறக் கூடியவர் உளரோ? கூறுவருளராயின், இறைவன் எல்லோர்க்குந் தந்தை, எங்கும் நிறைகின்றவன் என்பதை அவர்கள் பொய்யென்று நினைக்கிறவர்களா யிருக்கவேண்டும். "அகிலாண்ட கோடி ஈன்ற அன்னை" என்று சிவக்கூறாகிய மங்கையைப்பற்றிப் பேசுங்கால், சிறிய

விப்புவியினுள்ள நாடுகளனைத்தையும், மக்களனைவரையும் நினைக்கலாற்றேமாயின், வேறு பல்லுலகங்களை எங்ஙனங் கருதுவோம்? வெள்ளையர்களை நாம் அகற்றலாகாது; கபிலரை (yellow race) விலக்கலாகாது; கரியரை (Black race) ஒதுக்கலாகாது. எல்லோரையும் ஒன்று படுத்தி நினைக்குமளவும் கடவுள், உலகம், உயிர் என்ற சொற்களுக்கு நாம் செவ்வனம் பொருள் கண்டவர்களாகோம். இவ்வகையில் நமது உளம் விரியுமாயின், இந்தியர் கண்ட உண்மைகளும், தமிழ் நாட்டார் கண்ட உண்மைகளும் உலகெங்கும் பரவுதற்கிட முண்டாகும்.

மண்ணிற்குக் கீழும், மண்ணிலும், விண்ணிலுங் காணப் படுவனவெல்லாம் மங்கையின் கூறுகுமென்பது கண்டோம். ஈண்டு நாம் காணலாகாத நிலைகளும் உண்மைகளுமுள. அவை யாவும் மற்றொரு கூற்றிலடங்கும். கண்டவற்றி லடங்கு வதைக் கடவுளென்பது பொருளற்ற உரை. கண்டவற்றி னின்று முற்றும் நீங்கிய ஒன்று உளத்தாற் பற்றப்படாது. இவ்விரு தன்மையும் "வேயுறு தோளி பங்கன்" உருவத்தில் தீட்டப்பட்டிருக்கின்றது. இம்மைக்குரியன வெல்லாம் இட பால் விளங்கும் பெண்ணுருவாற் குறிக்கப்படுகின்றது; மறுமை வலபால் மிளிரும் ஆணுருவால் உணர்த்தப்படுகின்றது. "மறுமைப் பயனை விழைந்தவர் என்னைப் பணிகின்றனர்" என்று சிவபிரான் மொழிந்தானென்று புராணம் விளம்புவது மேற் கூறியதற்கு அரணுகின்றது. காணக்கூடாத வற்றிலிருந்தே காணக்கூடியவை தோன்றுகின்றன. நினைவிலிருந்து செய லுண்டாகின்றது. செயலைக்கொண்டு நினைவை யறியுமாறு இம்மையைக் கொண்டு மறுமையை அறியவேண்டும்.

---

# மதிப்புரை

## கந்தர் அநுபூதி

[கூடார்த்த தீபிகை என்னும் மறை பொருள் விளக்க உரையுடன்]

கந்தர் அநுபூதி ஆகம சாஸ்திரத்தை ஒட்டி அருணகிரி நாதரால் பாடப்பெற்றுள்ள ஒரு மந்திர நூல். ஒவ்வொரு செய்யுளும் மந்திரம், தந்திரம், பிரயோகம் என்னும் மூன்றையும் அடக்கியுள்ளதென்பதைத் தெளிவாக விளக்கி, சென்னை இராயப்பேட்டை வேதப்ரவசன மந்திரத்து ரிக்வேதத் தமிழாசிரியர் பல அருமையான மேற்கோள்களை எடுத்துக்காட்டி கவியுள்ளத்தை நன்கு வெளிப்படுத்தி யுள்ளார்கள். பழைய தலைப்புக்களையே பெய்து அத்தலைப்புக்களுக்குத் தக்கக் காரணம் கூறி, அம்மறைகளை யோதுவதனல் அடையக்கூடிய சித்திகளை எடுத்துக் காட்டியுள்ளது மிகவும் போற்றத்தக்கது. இப்புத்துரை இது வரை வெளிவந்துள்ள உரைகளின் மேற்போந்ததென்பது இவ்வுரையைப் படிப்போருக்குச் சொல்லாமலே விளங்கும். டபிள் கிரௌன் 1-க்கு 16 சைசில் சுமார் 250 பக்கங்கள் கொண்ட இந்நூலுக்கு விலை ரூபாய் ஒன்றுதான். வேண்டுவோர், முருகவேள் புத்தகசாலை, இராயப்பேட்டை, சென்னை, என்ற விலாசத்துக்காவது, வேதப்ரவசன மந்திரம், 27, முத்து முதலி வீதி, இராயபேட்டை, சென்னை என்ற விலாசத்துக்காவது எழுதிப் பெற்றுக்கொள்ளவும்.

---

## கந்தன் சித்திர பந்தன மாலை

இது கோயமுத்தூர் செட்டிபாளையத்திலிருக்கும், முருக பக்தர் திரு. R. N. கலியாண சுந்தர கவுண்டரவர்களால் இயற்றப்பெற்று கோவை வழக்கறிஞர் திரு. C. K. சுப்பிரமணிய முதலியாரவர்கள், திரு. கு. நடேச கவுண்டரவர்கள் முதலிய சிறந்த தமிழறிஞர்கள் முன்பு அரங்கேற்றப்பெற்றது. இதன்கண் முப்பது பிரிவுகளைக் கொண்ட பலவகை யாப்பினுல் ஆக்கப்பட்ட சித்திரச் செய்யுட்களும் அவற்றிற்குரிய பந்தனப் படங்களும் அடங்கியுள்ளன.

இதனை ஆசிரியரிடம் பெற்றுக்கொள்ளலாம். விலை அணு 8.

---

## காரைக்காலம்மையார் திருமுறை

இஃது பாலன் பதிப்புக் கழகத்தாரால் பதிப்பிக்கப்பட்டது. இதன் விலை அணு 6. வேண்டுவோர், முருகவேள் புத்தகசாலை நெ. 12, கணபதி தெரு, இராயப்பேட்டை, சென்னை என்ற விலாசத்திற்கு

எழுதிக்கொள்க. அழகிய இச்சிறு நூலில் பதினோராந் திருமுறையின் ஒரு பகுதியான காரைக்காலம்மையார் பிரபந்தங்கள் பருத்த எழுத்துக்களில் மிக அழகாக அச்சிடப்பட்டிருக்கிறது. திரு. வி. கலியாணசுந்தர முதலியார் அவர்கள் எழுதிய அரும்பத வுரையும் இதன்கண் சேர்க்கப்பட்டுளது.

---

## தெய்வ தற்சொரூபன்

என்ற பெயர் வாய்ந்த புத்தகம் ஒன்று எம் பார்வைக்கு வந்துளது. இஃது திரு. ஜி. வி. ஜோப் எம். ஏ., எல். டி., என்பவர்களால் பரிசுக்கட்டுரையாக எழுதப்பட்டு இந்திய கிறித்துவ இலக்கிய சங்கத்தாரால் புத்தக ரூபமாக வெளியிடப்பட்டதாகும். இப்புத்தகத்தில் கிறித்துவின் வரலாற்றுச் சம்பவங்கள் காலக்கிரமமாக எழுதப்பட்டிருக்கின்றன. இனிமையாகவும் தெளிவாகவும் எழுதப்பட்டுள்ள இந்நூலை வேண்டுவோர் தி கிறிஸ்டியன் லிட்டரேச்சர் சொஸைட்டி, சென்னை என்ற விலாசத்திற்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

---

## பரதன் அல்லது சகோதர வெற்றி

இந்நூல் நாடக ரூபமாக, திரு. க. இராமசாமி ஐயங்கார் அவர்களால் தமிழில் எழுதப்பட்டுளது. இதன்கண் எண்ணிறந்த இலக்கிய மேற்கோள்கள் காணப்படுகின்றன. சொற்சிலேடைகள் மலிந்து கிடக்கின்றன. இந்நூல் பாட புத்தகமாக அமையவேண்டு மென்ற நோக்கத்துடன் ஆக்கியோனால் எழுதப்பட்டதாகும். விலை ரூபாய் ஒன்று. வேண்டுவோர் திரு. க. இராமசாமி ஐயங்கார் நெ. 2, ஆறுமுகம் செட்டித் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை என்ற விலாசத்திற் கெழுதிப் பெற்றுக் கொள்ளவும்.

---

## சன்மார்க்கன்

கொங்குமண்டல சமரச சன்மார்க்க சங்கத்தாரால் திங்கட்டாளாக வெளியிடப்படும் இவ்வெளியீட்டின் ஐந்து இதழ்கள் எம் பார்வைக்கு வந்துள்ளன. இதன் ஆசிரியர் பழனி சி. சுவாமி நேசன் என்பார். ஆண்டுக் கட்டணம் ஒன்றுதான். வேண்டுவோர் சன்மார்க்கன் பத்திரிகாலயம் என்ற விலாசத்திற்கு எழுதவும்.

---

# சைவப் பெரியார் பிரிவு

## பண்டிதர் திரு. க. சிதம்பரநாதன்

யாழ்பாணம் தொல்புரத்தைச் சேர்ந்தவரும் நியாய துரந்தரருமாக விருந்த பண்டிதர் திரு. சிதம்பரநாதனவர்கள் சென்ற சித்திரைமாதம் 10-ம் தேதியன்று தேகவியோகமானமை தமிழுலகத்தார்க்கோர் தீராக் கவலையை யுண்டாக்கிவிட்டது. பண்டிதரவர்கள் யாழ்பாணம் இந்துக் கல்லூரியிலும் பின்னர் சென்னையிலும் கல்வி பயின்று ஆங்கிலத்திலும் தமிழிலும் நன்கு தேர்ந்து சமயாபிமானமும் தேசாபிமானமும் மிகவும் உடையவராய் யாழ்பாணத்தில் மாத்திரமன்றி இலங்கையின் பல பாகங்களிலும் நெடுங்காலம் புகழுடன் தொண்டு புரிந்து வந்தார்கள். இவர் யாழ்பாணம் இந்துக் கல்லூரியில் ஆசிரியராக விருக்குங்காலத்தும், பின்னர் இரத்தினபுரியிலும் யாழ்பாணத்திலும் நியாயதுரந்தரராகவும் பிரசித்த நொத்தாரிஸ் ஆகவும் திறமையுடனும் கீர்த்தியுடனும் கடமை புரிந்த காலத்திலும் தமிழ்த்தாயினதும் சைவ சமயத்தினதும் முன்னேற்றத்திற்காகச் செய்துவந்த தொண்டுகள் அளவிறந்தன.

இப்பெரியார் ஓர் பெரும் முருக பக்தர். கதிரைமலைக் கந்தன் பேரில் பிள்ளைத் தமிழும் வேறு மநேக பாக்களும் பாடியுள்ளார். சத்தியவான் சாவித்திரி என்னும் ஓர் இனிய நாடகமும் இயற்றியுள்ளார்.

இவர் காலம்செல்லும்போது இவரது வயது 41. இவ்விளம்பிராயத்தில் யாழ்பாணத்தவர்க்கோர் திலகம் போன்று விளங்கிய இப்பெரியார் இவ்வுலக வாழ்க்கையை நீத்து இறைவன் திருவடியைச் சேர்ந்தது நம்மனோரின் தவக்குறைவேயாம். பண்டிதரவர்களின் ஆடம்பரமற்ற சீவியமும், பதில் கருதாச்சேவையும், தெய்வபக்தித் திறனும், தமிழ்த் தாய்மேற் கொண்டிருந்த அளவிறந்த ஆர்வமும், அபிமானமும் அவர்களுடன் பயின்ற பலர்க்கும் ஓர் முன்மாதிரியாக விருக்குமென்பது திண்ணம்.

கொளும்பு A. கந்தையா.

## திவான்பஹதூர்
## பவானந்தம் பிள்ளையவர்களின் பிரிவு

சென்னை ரிட்டையர்ட் போலீஸ் டிபுடி கமிஷனர் திவான்பஹதூர் S. பவானந்தம் பிள்ளையவர்கள் குன்னூரில் 20-5-32-ல் விண்ணுலகெய்தினர் என்ற செய்தி தமிழுலகுக்கு மிகுந்த வருத்தத்தை விளைத்தது. இவர் தமிழ் வளர்ச்சி கருதி சில தமிழறிஞர்களின் உதவிகொண்டு தொல்காப்பியம், பொருளதிகாரம், இறையனாரகப்பொருள் போன்ற சில அரிய நூல்களை வெளிப்படுத்தியுளார். இவர் தோற்றிய தமிழ்க் கழகத்தை இவர் இறக்குந் தருவாயில் நியமித்த டிரஸ்டிகள் செவ்வனே நடாத்தித் தமிழுலகுக்கு நலம் புரிவார்களாக.

